

# சப்தகிரி

.ம்பர், 1988

விலை ரூ. 1/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



கஜானனம்பூத கணாதி ஸேவிதம்
கபித்த ஜம்பூ பலஸார பக்ஷிதம்
உமாஸுதம் சோக விநாச காரணம்
நவாமி விக்னேஸ்வர பாத பங்கஜம்.

யானை முகத்தை உடையவரும்—பூத கணங்களினால் போற்றப் படுகிறவரும்—நன்றாகப் பழுத்ததான நாகப் பழங்களினுடைய சாற்றைப் புசிப்பவரும் — உமையின் திருக்குமரனும் — துயரங்கள் அழிவதற்குக் காரணமாக இருப்பவருமான விக்னேசுரருடைய திருப்பாத மலர்களைப் பணிகின்றேன்.

செப்டம்பர் 1988

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1 மலர் 19

வருடச் சந்தா ரூ. 12 இதழ் 4

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஆலிலைக் கண்ணன்

பின்னட்டையில் : ஸ்ரீ விநாயகப் பெருமான்

சித்திரம் ; திரு. ஜே. ஜெகதீஷ்

2-ம் பக்கம் : கருட சேவை (திருமலை பிரம்மோத்சவம்)

3-ம் பக்கம் : புஷ்கரணியில் சக்ர ஸ்நானம் (திருமலை பிரம்மோத்சவம்)

சிறப்பாசிரியர் .
திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர் .
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

'கூடி வாழ்ந்தால் கோடி நன்மை' என்பது ஆன்றோர் வாக்கு. அது அவர்களது அனுபவ வாக்கு. இதில் நன்மை என்பது பொருளாதார, சமூக இலாபங்களுக்காக மட்டுமல்ல. ஏனெனின் இவ்இன்பங்கள் நீடித்திருக்க வேண்டுமாயின், அவற்றைத் துய்த்திடும் தனிமனிதனின் சிந்தனையும் செயலும் சிறந்திருக்க வேண்டும். ஆம், அன்பு, கருணை, பொதுநலம் போன்ற அறப்பண்புகள் அவனிடம் குடிகொள்ளுதல் வேண்டும். அடுத்தவன் பசியாது இருந்தால்தான் இவன் நிம்மதியாக உண்டிட முடியும். இல்லையெனின் இவன் விழுங்கும் ஒவ்வொரு கவளத்திற்கும் ஆபத்துதான். இந்நிலை வாராது அமைய வேண்டுமாயின், பிறர் துன்பத்தை, மகிழ்ச்சியைப் பங்கிட்டுக் கொள்ளும் மனபக்குவம் பெறுவது அவசியமாகும்.

வீடு எனும் நான்கு சுவர்களைத் தாண்டி வெளியில் வரும்போது அவன் உலகத்தைப் பார்க்கின்றான். தன்னை விட பல நிலைகளில் தாழ்ந்துள்ளவனைப் பார்த்துத் தன்னுடைய இந்த நிலைக்காவது அவன் பெருமைப்படுகிறான் அல்லது உயர்நிலையில் உள்ளவனைப் பார்த்துத் தன்னை உயர்த்திக் கொள்ள முயற்சிக்கின்றான். இதுதான் வாழ்க்கையின் அடிப்படை உயிரோட்டம். இதனை எவ்வாறு அவன் தன் வாழ்வில் உணருவது?

துன்பத்தைக் கண்டு துவளுவதும், மகிழ்ச்சியில் மூழ்கி விடுவதும் மனிதனின் பலவீனம். இதனைத் தவிர்க்க வேண்டுமாயின் அவன் வெறுப்பு, பொறாமை துறந்து அன்பு, அமைதி ஆகியவற்றின் பெருமையை உணர்ந்திடல் வேண்டும். இந்நிலை பெற வேண்டுமாயின், அவன், இனம், இடம் மொழி, நிறம் மறந்து மற்றவனை நேசித்தல் வேண்டும். அவர்களுடைய இதயம் பேசிடல் வேண்டும், இதற்கான சூழ்நிலையை அவரவர்கள் சமயமே உருவாக்கியுள்ளன. தவறுகளைத் திருத்திக் கொண்டு, தன்னைச் சுற்றியுள்ள பிரச்சனைகளை மனயமைதியுடன் சிந்தித்துத் தீர்த்துக் கொள்ளும் ஒரு சூழ்நிலையை, மற்றவர்களின் இன்ப துன்பங்களைப் பங்கிட்டுக் கொள்வதால் மட்டுமே பெற முடியும் என்பதையும், பரந்த மனப்பான்மை, பொறுமை, பணிவு, நேர்மை எனும் பொதுச் சமுதாய அறப்பண்புகளை அவர்களிடையே சமய உணர்வு ஒன்றே ஏற்படுத்த முடியும் என்பதையும் நம்பிக்கையுடன் உணர்ந்தறிந்து, அச்சமயம் குறிப்பாக இந்து சமயம் பல சமய விழாக்களை ஒரு குடும்பத்தார் மட்டுமன்றி ஒரு சமூகமே-ஒரு நாடே, ஜாதி, மொழி, இடம் எனும் வேறுபாடுகளைக் களைந்து பலரும் தோளோடு தோள் சேர்ந்து மகிழ்வுறும் வகையில் பல ஆலய சமய விழாக்களை ஏற்படுத்தியுள்ளது. இவற்றுள் மிக முக்கியமாகக் கருதப்படுவது ஆண்டுதோறும் பல கோயில்களில் நடைபெற்றுவரும் பிரம்மோத்சவமாகும்.

நாட்டின் பல இடங்களில் பல கோயில்கள் விளங்கினாலும், உலக மக்களை ஒருங்கே தன்பால் ஈர்த்திடும் வகையில் தனிப்பெருந் தன்மையுடன் விளங்குவது, நின்ற வண்ணம் அருள்புரிந்திடும், மண்ணின் பாவங்களை எரித்திடும் அவ் ஏழுமலைகளில் செங்கோலோச்சி வரும் நெடியோனின் திருமலைக் கோயிலாகும். வேதங்களாலும், புராணங்களாலும் புகழ்ந்தேற்றப்பட்டு 'வினைச்சுடரை அவித்து மனச்சுடரைத் தூண்டும்' திருமலையில் வீற்றிருந்து, தன் பல யுக அவதாரங்களின் மூலம், அரக்கர்களைக் கொன்று அறவோர்களைக் காத்திடுதலே தன் முதற்பணியாகக் கொண்டு, இக்கலியுகத்திலும் கண்கண்ட தெய்வமாக, எல்லோராலும் வணங்கப்படும் ஒரு சமஷ்டி தெய்வமாக விளங்கி, புரவலர்களாலும், பாவலர்களாலும் புகழப்பட்டு, வேற்றுச் சமயத்தாராலும் வணங்கப்பட்டு, இந்து சமயத்தின் 'பக்திக் கோட்டை'யின் தன்னிகரற்றத் தலைவனாக அவ்அலங்காரப் பிரியன் அன்று முதல் இன்று வரை தன்னை அண்டினவர்க்கு ஆவன தந்து அருள் பாலிக்கின்றான்.

அப்பெருமைமிகு வேத நாயகனுக்கு அன்றே பிரமன் விழா ஒன்று எடுத்தான். அதுவே பிரம்மோத்சவம். அன்று தேவர்களால் விரும்பி எடுத்த அப்பிரம்மோத்சவம் காலம் காலமாக இக்கலியிலும் மன்னர்கள் பலரால் தொடரப் பெற்று, இன்று மக்களால் மகிழ்ந்து கொண்டாடப்பட்டு வரப்படுகிறது. இவ்வகையில், இவ்வாண்டு, அதிலும் அதிக மாதம் வருவதால் இரண்டு பிரம்மோத்சவங்கள் இம்மாதத்திலும், அடுத்த மாதத்திலும் (நவராத்ரி பிரம்மோத்சவம்) கொண்டாடப்பட உள்ளன. நாளும் விழாக் கோலம் பூணும் திருமலை இதுபோது, மண்ணில் வைகுந்தமாகத் திகழும். 'பாலாஜி' 'கோவிந்தன்' 'ஏடுகொண்டல வாடு' 'ஏழுமலையான்' என்று பல பெயர்களால் பலரால் தொழுதேற்றப்படும் அக் கலியுகவரதனை பல வாகனங்களிலும், முக்கியமாக கருட சேவையன்றும், திருத்தேர் அன்றும் கண்டுகளித்திடத் திருமலைக்கு வருகை புரியும் யாத்திரிகர்கள் பயனுறும் வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல ஏற்பாடுகளை மேற்கொண்டுள்ளது.

திருப்பதியிலிருந்து திருமலைக்குச் செல்லும் மலை வழிப்பாதை முழுவதும் தடைபடா ஒளி விளக்குகள், யாத்திரிகர்களின் பாதுகாப்புக்காகக் காவல் அமைப்புகள், மருத்துவ முகாம்கள், குடிநீர் வசதிகள் ஆகியன மேற்கொள்ளப்பட்டுள்ளன. இப்பத்து நாள் உத்சவத்தின்போது குறிப்பாக, கருட சேவையன்று திருப்பதிக்கும் திருமலைக்கும் 24 மணி நேர பேருந்து போக்குவரத்து வசதிகள், அதிக ஊழியர்கள் அமர்த்தப்பட்ட கல்யாணக் கட்டாக்கள் (தலைமுடி வேண்டுதல்) நாளும் 12,000 யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வசதிகள், 'க்யூ' கொட்டகைகளில் கோயில் மற்றும் ஆஸ்தான மண்டபத்தில் நடைபெறும் வைதிக மற்றும் சமய நிகழ்ச்சிகளை இருந்த இடத்திலேயே கண்டுகளித்திடத் தொலைக்காட்சிப் பெட்டிகள் வசதிகள், மலிவு விலையில் இந்து சமயப்புத்தக விற்பனைக் கூடங்கள், அதிக தங்கு வசதிகள் ஆகியனவும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

மேற்கொள்ளப்பட்டுள்ள இம்முயற்சிகள் யாவும், மக்கள் மகிழ்ந்திட, உள்ளமும் உடலும் புதுத்தெம்பினைப் பெற்று ஆன்மீக மற்றும் சமூக அளவில் ஆக்கப்பூர்வமான முன்னேற்றப் பாதையில் தங்கள் வாழ்க்கையை அமைத்திடவே என்று கூறிக்கொண்டு, எதிர்வரும் பிரம்மோத்சவ நிகழ்ச்சிகளுக்கு வருகைபுரியும் யாத்திரிகர்களை மனமுவந்து திருமலை திருப்பதி தேவஸ்தானம் வரவேற்கின்றது.

# செய்திச் சுருக்கம்

திருமலையில் ஆழ்வார் ஏரி குடில்களின்மீது 100 முதல்தள தங்கு அறைகள் ரூ. 1.06 கோடி செலவில் கட்டி முடிக்கப்பட்டு, அண்மையில் அவற்றை தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் திறந்து வைத்தார். ஆந்திர மாநில அறநிலையத் துறை ஆணையர் திரு. பி. பாபுரெட்டி மற்றும் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு ஆகியோரும் இத்திறப்பு விழாவில் பங்கேற்றனர்.

ஆந்திர மாநில வேளாண்மைத் துறை அமைச்சர் திரு. வி. நாகேஸ்வர ராவ் மற்றும் ஒரிஸ்ஸா உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி திரு. அகர்வால் அவர்கள் தன் துணைவியாருடனும் திருமலைக்கு அண்மையில் வருகை புரிந்தனர்.

7-8-88 அன்று திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதித் தாயார் திருக்கோயிலில் உலக நன்மைப் பொருட்டு நடைபெற்ற கோடி குங்குமார்ச்சனை எனும் சிறப்பு சமயவிழா இனிது முடிவடைந்தது. இச்சிறப்பு நிகழ்ச்சியில் தலா ரூ. 5,000/- செலுத்தி 11 குடும்பங்களும், மற்றும் தலா ரூ. 300/- செலுத்தி 234 நபர்களும் பங்கேற்றனர். இறுதி நாள் நிகழ்ச்சியில் தி. தி. தே. செயலாட்சித் தலைவர், இணை செயலாட்சித் தலைவர் மற்றும் தி. தி. தே. உயர் அலுவலர்கள் பலரும் பங்கேற்றனர்.

திருமலை மற்றும் திருப்பதியில் உள்ள பள்ளி மாணவ மாணவிகள் பயனுறும் வகையில் இலவச பற்சிகிச்சை முகாம் ஒன்று அண்மையில் பற்சிகிச்சை நிபுணர் டாக்டர். ஏ. எஸ். நாராயணா அவர்களின் மேற்பார்வையில் செயல்பட்டது. இம்முகாமில் 3144 சிறுவர்கள் பரிசோதிக்கப்பட்டனர். இம்முகாமினை ஆந்திர மாநில வனத்துறை அமைச்சர் திரு. ஜி. முத்துகிருஷ்ணம நாயுடு அவர்கள் திறந்து வைத்தார். இது சம்பந்தப்பட்ட திறப்பு விழாவிற்கு தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு அவர்கள் தலைமை வகிக்க, திருப்பதி ஸ்ரீ பத்மாவதி மகளிர்ப் பல்கலைக் கழக துணைவேந்தர் திருமதி. டாக்டர். கே. ராஜ்யலட்சுமி அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார்.

திருமலைப் பற்றிய படத் தொகுப்பு ஒன்றினை இந்தியத் தொலைக் காட்சி மூலம் 'நமது கோயில்கள்' எனும் பிரிவில் தேசிய மற்றும் மாநிலங்களின் அளவில் ஒளிபரப்பும் வகையில் அப்பணி சென்னை ஜெயஸ்ரீ பிக்சர்ஸ் எனும் தனியார் நிறுவனத்திற்கு ஒப்படைக்கப்பட்டுள்ளது. இதற்காக ரூ. 60,00/- அந்நிறுவனத்தாருக்கு அளிக்கப்படும்.

திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் 9-7-88 முதல் தி. தி. தே. உதவி செயலாட்சித் தலைவராக பொறுப்பேற்றார்.

சென்னையிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் வி. வி. ஆர். தர்ம சாலையிலுள்ள குளிர்ச்சாதனம் பொருத்தப்பட்ட அறைகளின் ஒரு நாள் வாடகை தனி அறை ஒன்றிற்கு ரூ. 100/- மற்றும் குடும்பம் ஒன்று தங்கும்படியான அறை ஒன்றிற்கு ரூ. 150/- ஆகவும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. (வெளி நபர்களுக்கு)

இவ்வாண்டில் எதிர்வரும் இரு பிரம்மோத்சவங்களின்போது திருமலையில் நாள்தோறும் இலவசமாக 12,000 யாத்திரிகள்களுக்கு உணவு வழங்க தகுந்த ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

தி.தி.தே. கோயில்களுக்கு 1988-89 ஆண்டுக்கென 6 பகுப்புகளைக் கொண்ட 100 ஜோடி கோயில் குடைகளை வாங்குதற்கு ரூ. 1,58,000/- ஒதுக்கப்பட்டுள்ளது இக்குடைகள் சென்னை பி. சி. தசரத ஷா எனும் நிறுவனத்தாரிடமிருந்து வாங்கப்படும்.

திருச்சானூர் கோயில் மூலவருக்காக ரூ. 1020/- மற்றும் உற்சவருக்காக ரூ. 638.80 செலவில் பட்டுப் புடவைகள் சென்னை நல்லி சின்னசாமி செட்டி நிறுவனத்தாரிடமிருந்து வாங்கப்படும்.

திருமலைக் கோயில் வருமானம்

8-8-88ம் நாள் திருமலைக் கோயில் வரலாற்றில் ஒரு குறிப்பிட்டத்தக்க நாளாகும். அன்று ஒரு நாள் மட்டும் கோயில் வருமானம் ரூ. 13 இலட்சமாகும். இதில், உண்டி மூலமாக ரூ. 7.14 இலட்சமும், சிறப்பு நுழைவு தரிசன சீட்டுக்களின் விற்பனையாக ரூ. 3.35 இலட்சமும், மற்றும் பிரஸாதங்களின் விற்பனையாக பெற்றத் தொகையும் இதில் அடங்கும்.

மேலும் சாதாரணமாகக் கூட்டம் அதிகமாக அமையாத ஆடி மாதத்திலும் இவ்வாண்டு திருமலையில் சுமார் 20,000 யாத்திரிகர்கள் சென்ற மாதம் இரண்டாம் வாரத்தின் இறுதியில் திருமலைக்கு வருகை புரிந்துள்ளனர். விடியவிடிய தர்ம தரிசனம் தொடர்ந்தது. 13, 14 தேதிகளில் 197 கல்யாணோத்சவங்கள் நடைபெற்றதில், மேலாண்மைக்குக் கிடைத்த வருமானம் ரூ.1.84 இலட்சமாகும்.

திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தார் மேற்கொண்டு தற்போது ஆரம்பப் பணிகள் துவக்கப்பட்டிருக்கும் அதி நவீன மருத்துவ மனையில் பல பகுதிகளுக்குக் காற்றுக் கட்டுப்பாடு சாதனங்கள் பொருத்தப்பட இருப்பதால், இதற்கான ஆலோசனைகள், திட்ட அமைப்புகள், பணி மேற்பார்வை போன்றவற்றை இத்துறையில் தேர்ந்த திரு. என். வைத்யநாதன் எனும் பொறியாளருக்கு ஒப்படைப்பதென்று மேலாண்மை முடிவு செய்துள்ளது. இதற்காக இவருக்கு ரூ. 45,000 வழங்குவதென்றும், திருப்பதிக்கு வருகை புரியும் போதெல்லால் சென்னையிருந்து திருப்பதிக்கு போய்வர விமான பிரயாணப்படியும், மேலும் திருப்பதியில் இலவச தங்கு, உணவு வசதி, உள்ளூர் பிரயாண வசதிகளையும் (இவையாவும் ரூ. 10,000 மிகாமல் இருக்கும்படி) வழங்குவதென்றும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

திருப்பதியிலுள்ள திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கு 1988-89 ஆம் ஆண்டிற்கான வருடாந்திர நிர்வாக நிதியாக ரூ. 12 இலட்சம் வழங்க தி.தி.தே. முடிவு செய்துள்ளது.

திருமலைக் கோயில் பிரஸாதமான ஆர்ஜித லட்டு படியின் விலை தற்போது ரூ. 750/- ஆக 1-7-88 முதல் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

# பெரியாழ்வார் இறையன்பு நிலை

## மூன்று படிநிலைகள்

அன்புநெறி (பக்தி) மூன்று படிநிலைகளைக் கொண்டது. அவை இறையன்பு (பரபக்தி) இறையறிவு (பரஜ்ஞானம்), உயர் இறையன்பு (பரம பக்தி) என்பன. இவை மலர் ஒன்று பிஞ்சாகிக் காயாகிப் பின்பு கனியாவது போல அடைவே வருவன. இம்முறைமையில் அல்லாமல் முதலிலேயே உயர் இறையன்பு வாய்க்கப் பெற்றாரும் உண்டு. சூடிக்கொடுத்தச் சுடர்க்கொடியின் இறையன்பு இத்தலத்தில் அமைந்தது. அதனாலேயே அவளைப் 'பிஞ்சிற் பழுத்தாள்' என்று குறிப்பர் மணவாள மாமுனிகள். இவ்வினிய தொடருக்குப் பிள்ளைலோகம் சீயர் வரைந்துள்ள விளக்கம் வருமாறு; 'பரபத்தி ப்ரஜ்ஞாந பரம பக்திகளாய் க்ரமத்திலே பரிணதையாம்படியான ஞாநங் கனிந்த நலமான பரமபக்தியானது அறிவு நடையாடாத பர்வத்திலே யாய்ந்து இவள் பரிபக்வையானது.' இது கொண்டு அன்பு நெறியின் மூன்று படிநிலைகள் தெரிய வருகின்றன. மேலும், உயர் இறையன்பு (பரம பக்தி) ஞானம் கனிந்த நலம் என்னும் தெளிவும் பெறப்படுகிறது. இதனையே நம்மாழ்வார் 'மதிநலம்' என்று திருவாய்மொழி முதற்பாசுரத்தில் குறிக்கிறார்.

## மூன்று திருப்பெயர்கள்

பெரியாழ்வாரின் இறையன்பு அடைவே முதிர்ந்து கனிந்து ஒன்று. அவருக்கு அமைந்த திருப்பெயர்களே இதனைக் காட்டும். அவருடைய இயற்கைக்கேற்பப் பெற்றோர் இட்ட பெயர் விட்டுசித்தன். அவரது புலமைப் பெருக்கில் மகிழ்ந்த பாண்டியன் வழங்கிய பட்டப் பெயர் பட்டர்பிரான். அவருடைய ஆராத அன்பு வெள்ளம் சுழித்தோடும் உள்ளத்தை உணர்ந்து, வைணவ உலகம் ஒரு மிடறுகச் சூட்டிய பெயர் பெரியாழ்வார். இம்மூன்று திருப்பெயர்களும் அவருடைய அன்பின் வளர்ச்சியைக் காட்டும் மைல்கற்கள் ஆகும்.

## முதல்நிலை

இவ்வாழ்வார் திருவில்லிபுத்தூரில் வேயர் குலத்தில் பிறந்தார். இவருக்குப் பெற்றோர்கள் வைத்த விட்டுசித்தன் என்னும் பெயர் இவர் வைணவக் குடும்பத்தில் பிறந்தவர் என்பதனைத் தெரிவிக்கிறது. அங்கு உகந்துறையும் வடபெருங்கோயிலுடையானிடம் அன்புகொண்டார். அவனுக்கு அடிமை செய்து போதுபோக்க விழைந்தார். கண்ணன் கம்சனுக்குப் பணிசெய்து போந்த மாலாகாரன் இல்லத்தில் எழுந்தருளிப் பூ வேண்டினன் என்பதனையும், அவன் உகந்து சூட்டச் சூடினன் என்பதனையும் நினைவு கூர்ந்தார். அத்தலைக்குப் பூவிடுகையொழிய வேறு கடன் தமக்கு இல்லை என்று துணிந்தார். அத்துறையில் இழிந்து, நன்மாலைகள் தொடுத்து, அவனுக்குப் பலபகலும் சூட்டி அதுவே பணியாய் நெஞ்சுகந்தார். அடிமைச் சுவடு அறிந்தவராய் விட்டுணுவைச் சித்தத்தில் கொண்டு வாழ்ந்தார். இவரது வாழ்க்கை இறையன்பு மணக்கும் புனித வாழ்வாக இருந்தது. இதுவே அன்பு நெறியின் தொடக்கமான இறையன்பு (பர பக்தி) ஆகும்.

## இரண்டாவது நிலை

இறையன்பு இறையறிவினைப்பெற அடியாய் அமையும். அது தன்னடையே இறைவனைப் பற்றிய உண்மைகளை அணிந்துகொள்ளச்செய்யும். 'மின்னுநூல் விட்டுசித்தன்' 'வேயர் தங்கள் குலத்துதித்தவிட்டுசித்தன்' ஆகிய பாசுரத் தொடர்கள் இவர் வேத வாய்த்தொழிலாளர் குலத்தில்பிறந்தவர் என்பதனை அறிவிக்கின்றன. மறையவர் குலத்தில் பிறந்த இவர் நூற் பயிற்சி அற்றவராய் இருந்தார் என்பது பொருந்தாது. இறைவனைக் குறித்த இதிகாச புராணங்களைக் கற்பதிலாவது போது போக்கியிருத்தல்வேண்டும். இக்கருத்துக்கு மாறாக ஒரு குறிப்பு இவரது வரலாற்றில் காணப்படுகிறது. வடபெருங் கோயிலுடையான் இவரது கனவில் தோன்றிப் பாண்டியன் அவைக்களத்துக்குச் சென்று வாதில்

முனைவர் தெ. ஞானசுந்தரம்,
சென்னை 102

வென்று விரைந்து கிழியறுத்து வரப் பணித்தான். அதுபோது இவர், 'நலங்களாய நற்கலைகள் நாவினும் நவின்றிலாத நான் என் கையில் கொட்டுத் தழும்பைக் காட்டிக் கிழியை அறுக்கலாமோ? என்றார்' என்பதே அது. இதனால் கல்லாதவராக இருந்தார் என்று முடிவு செய்தல் தகாது. ஆசாரியன் ஒருவன் வாயிலாக முறையாகப் பெறும் மெய்யறிவினைத் தாம் பெறவில்லை என்பதனையே குறித்தார் எனக் கொள்வது சிறப்புடைத்து. மாலாகாரர் வாழ்க்கையை அறிந்து தாமும் பூத்தொண்டில் இழிந்தார் என்றும் குறிப்புப் பாகவதம் போன்ற நூல்களை அறிந்தவர் என்பதற்குச் சான்றாய் அமைகிறது. பின்பு இவருடைய இறையறிவு இறைவன் திருவருளால் மயா வற்ற மதிநலமாக வளர்ந்து சிறந்தது.

அதனை,

,' பீதக வாடைப் பிரானார்
பிரம குருவாகி வந்து
போதில் கமலவன் னெஞ்சம்
புகுந்துமென் சென்னித் திடரில்
பாத இலச்சினை வைத்தார் " *

என்று இவரே குறிப்பிடுகிறார்.

இவருக்குப் பட்டர்பிரான் என்னும் பெயர் வந்த வரலாறே இவருடைய இறையறிவினை இனிது விளக்குவதாகும். வல்லபதேவன் என்பான் பாண்டிய நாட்டின் அரசன். அவன் சிறியதைப் பெரியது நலியாதபடி செங்கோல் செலுத்தி வந்தான். ஒருநாள் கறுப்புடுத்து இரவில் நகர் வலம் வந்தான். அப்பொழுது ஒரு வீட்டுத் திண்ணையில் மறையவன் ஒருவன் கிடக்கக் கண்டான். அவனை எழுப்பி யார் என வினவினான். அவன் தான் மறையவன் என்றும் கங்கையாடி வருபவன் என்றும் தெரிவித்தான். மன்னன், 'அங்ஙனமாயின் வடமொழிச் செய்யுள் ஒன்று சொல்லுக' என்று பணித்தான். அவ்வந்தணன், மழைப் பருவத்தில் இன்புற்று வாழ மற்றப் பருவத்தில் பாடுபட வேண்டும்; இரவில் கவலையின்றிக் கண்ணயரப் பகலில் உழைக்க வேண்டும்; கிழப்பருவத்தில்இடரின்றி வாழஇளம்பருவத்தில் உலையாமுயற்சி வேண்டும்; மறுமையில் இன்புற இம்மையில் அறவினை இயற்றல் வேண்டும் என்னும் பொருளமைந்த செய்யுளைக் கூறினான். அதனைக் கேட்ட மன்னன் தனக்கு இம்மையில் குறையொன்றும் இல்லாததனால் மறுமையில் இன்புறுதற்கு வழிகான விழைந்தான். அதன் பொருட்டுப் பரம் பொருள் யாது என்பதனைத் தெளியப் புலவர் அவையினைக் கூட்டினான். அவ்வாராய்ச்சியில் விட்டு சித்தர் பெருமான் பணித்தவாறு கலந்து கொள்ள மதுரை மாநகரை அடைந்தார் பாண்டியமன்னனும்அவனுடைய அமைச்சர் செல்வ நம்பியும் வணங்கி வரவேற்றனர். விட்டுசித்தர் பேசத் தொடங்கியவுடன், நான்முகன் அருளால் வால்மீகி முனிவர் பொருளனைத்தையும் உணர்ந்து கொண்டது போலவும், பாஞ்ச சன்னியம் பட்டவுடன் மன்னர் குலத்தில் பிறந்த சிறுபிள்ளை துருவன் பேரறிஞனாக மாறியது போலவும் பெருமானுடைய அடியற்ற அருளாலே (நிர்ஹேது ப்ரஸாதத்தாலே) தாமும் மறைப் பொருள்கள் எல்லாம் கைவரப்பெற்றார். அங்கு நாராயணனே பரம் பொருள் என்று மேற்கோள்களால் அறுதியிட்டார். அகரத்தால் சுட்டப்பெறும் பெருமானுக்கே மகரத்தால் குறிக்கப்பெறும் உயிர் உரியதுஎன்று நிலைநாட்டினார். அவன் நோக்குபவன் (ரக்ஷகன்;7 நாம் நோக்கப்பெறுபவர்கள் (ரக்ஷ்யம்); அவன் அன்னல் (சேஷி); நாம் அடிமைகள் (சேஷபூதர்); அவன் உடையவன் (ஸ்வாமி); நாம் உடைமைகள் (ஸ்வம்) என்று பெருமானுடைய மேன்மைத் தலைமைத் தன்மைகளை உணர்த்தினார். இவருடைய அறிவுத் தெளிவினைக் கண்ட பாண்டிய மன்னன் இவர்க்குப் 'பட்டர் பிரான்' என்று பட்டம் சூட்டினான். பட்டர் என்னும் சொல் புலவர்களைக் குறிக்கும். பிரான் என்னும் சொல் வள்ளல் (உபகாரகன்) தலைவன் என்று பொருள்படும். இதனால் இவர் புலவர்களின் தலைவராகத் திகழ்ந்தார் என்பது விளங்குகிறது. இஃது இவருடைய இறையறிவினைத் (பரஜ்ஞானத்தை) தெரிவிக்கிறது. இஃது அன்புநெறியின் இரண்டாவது நிலை.

மூன்றாவது நிலை

ஒருவனுக்கு இறைவனைப் பற்றிய முழுமையான அறிவு வாய்க்கும் போது, பெருமானுடைய தலைமை, மேன்மை, நீர்மை, எளிமை, முற்றறிவு, பேராற்றல் 'குறைவிலா நிறைவு, பேரிறைமை ஆகிய பண்புகளும், தனது தன்மையும்' அவனை அடையும் பேறும், அதற்குரிய ஆறும், தனக்கும் அவனுக்கும் குறுக்கே நிற்கும் இடைச்சுவரும் ஆகிய ஐம்பொருள் பற்றிய தெளிவு கிட்டுகிறது. பெருமாள் மீது கொண்ட அன்பு கனிகிறது; உயர் அன்பாக மாறுகிறது. ஆழ்வார்கள் அனைவரும் இத்தகைய அன்பின் முதிர்ந்த நிலையைப் பெற்றவர்களே ஆவர். இந்த அன்புவயப்பட்ட நிலையில்தான் அவனை அடைய ஏங்கினர்; அவனுக்குப் பல்லாண்டு பாடினர்.

ஆழ்வார்களில் பெரியாழ்வாருக்குத் தனியான ஏற்றம் உண்டு. மற்றைய ஆழ்வார்கள் ஒரு காலத்தில் பல்லாண்டு பாடினர். இவரோ பெருமானைக் கண்டது முதல் கலக்கமெய்திப் பல்லாண்டு பாடிக் கொண்டே இருந்தார். பரம்பொருள் யாது என்று தெளிந்த பாண்டியன் வல்லபதேவன் இவரை யானைமேல் ஏற்றி நகர்வலம் வந்தான். தம் குழந்தைகள் சிவிகையில் வரும் காட்சியினைக் காண விழைந்து வரும் பெற்றோர்களைப் போலப் பெருமான் பிராட்டியோடு பெரிய திருவடியின் மேல் ஏறி இவருக்கு நேரும் சிறப்பினைக் காண விண்ணில் வந்து காட்சியளித்தான். அக்காட்சி இவரைத் தம் உயர்வை எண்ணி இறுமாந்திருக்கச் செய்யவில்லை. மாறாக, அச்சங் கொள்ளச் செய்தது. ஆடவர் பெண்ணாகப் பிறந்திருக்கக் கூடாதா என்று ஏங்கும்படி அமைந்த அவன் வடிவழகையும், பேசப் பிசகும்படியான மென்மையையும், கவர்ச்சி இளமைகளையும் கண்டார். அவனுடைய முற்றறிவு, முடிவில் ஆற்றல், காக்கும் தன்மை ஆகிய அனைத்தையும் மறந்தார்! தன்னிலை அழிந்தார். 'இது பொல்லாத உலகமாயிற்றே! இவ்விருள் தருமா ஞாலத்தில் எதிரம்பு கோக்கும் இராவணனைப் போன்ற பகைவர்கள் குவாலாய் இருப்பார்களே. காலம் நடையாடாத திருநாட்டில் அமரர்கள் பல்லாண்டு கேட்டு இனிது இருப்பவன் கலியரசோச்சும் மண்ணுலகில் காட்சி தருகிறானே! இவனுக்குக் கண்ணேறு பட்டுவிடுமோ!" என்று கலங்கினார். பொங்கும் பரிவாலே வயிறு பிடித்து யானைமேல்

கிடந்த மணிகளைத் தாளமாகக் கொண்டு பல்லாண்டு பாடினார்.

இப்படிப் பெருமானைக் கண்டவுடன் முன்னம் தம் குறைகளை அவனிடத்துச் சொல்லிப் போக்கிக் கொள்ள விழையாமல் அவனுக்கு நன்மைகளை எண்ணி நின்ற சிறப்பு இவர் ஒருவருக்கே உண்டு. நம்மாழ்வாருக்கு மயர்வற மதிநலம் அருளப் பெற்ற நிலையில் தம்முடைய "பொய்ந் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்புமே" நினைவுக்கு வந்தன. பெருமான் திருமங்கையாழ்வாருக்குத் தன்படிகளைக் காணக் கொடுத்த நிலையில் அவர் தம் முன்னைய நிலையினை எண்ணி 'வாடினேன்' என்று பாடினார். பெரியாழ்வார் முதலில் மட்டுமின்றி இடையிலும் முடிவிலும் அவனுக்குப் பரிந்து பாடியுள்ளார், திருமொழியின் பெரும் பகுதிகளில் தாய் நிலையில் இருந்து கண்ணன் நலன் குறித்துப் பாடியுள்ளார், கைக் குழந்தையான கண்ணனுக்குப் பூதனையாலும் சகடாசுரனாலும் வந்த தீங்குகளை எண்ணி அவன் வென்ற திறத்தை எண்ணி மகிழ்ந்துள்ளார். இறுதியில் பெருமானை விழுப்புடன் காக்க அமரர்களை வேண்டியுள்ளார். தம்மைப்பற்றிய நினைவு அவர்க்கு ஒரோர் வழியே வந்தது. 'துப்புடையாரை' என்னும் திருமொழி முழுதும் தம் குறையைப் போக்கிக் காக்குமாறு பெருமானிடம் அவர் விண்ணப்பித்ததாக அமைந்துள்ளது.

> "குன்றெடுத் தாநிரை காத்த ஆயா!
> கோநிரை மேய்த்தவ னே! எம்
> மானே!
> அன்று முதல் இன் றறுதி யாக
> ஆதியஞ் சோதி மறந்த றியேன்,
> நன்றுங் கொடிய நமன்ற மர்கள்
> நலிந்து வலிந்தென்னைப் பற்றும்
> போது
> அன்றங்கு நீ யென்னைக் காக்க
> வேண்டும்
> அரங்கத் தரவணைப்பள்ளி யானே"

என்னும் பாசுரத்தில் அவர் தம குறையினை முடிக்கப் பெருமானிடம் வேண்டுவதனைக் காணலாம்.

எனவே, தம் குறைகளையே என்றும் நினைந்து அவற்றைப் போக்க முயன்று என்றோ ஒரு நாள் இறைவனுக்குப் பல்லாண்டு பாடி ஏனைய ஆழ்வார்களைப் போலன்றி, என்றோ ஒரு நாள் தம் குறைகளை அவனுக்கு விண்ணப்பித்து என்றும் அவன் நலத்திற்கு வேண்டி நின்ற சிறப்பால், இவர்க்குப் பல்லாண்டு கூறுவது என்றும் உரியதாகச் சொல்லப் பெறுகிறது.

பெருமானது பேரழகு ஏனைய ஆழ்வார்களின் கண்ணை நிறைத்தது; மனத்தைக் கவர்ந்தது. அவர்கள் அந்த அழகாகிய பள்ளத்தில் மூழ்கினர். ஆனால் பெரியாழ்வாருக்கு அந்த அழகு, அதற்கு என்ன தீங்கு வருமோ என்னும் அச்சத்தைத் தோற்றுவித்தது. அதற்குக் காப்பு வேண்டி மேன் மேலும் பல்லாண்டு பாடுவதற்கு நிலமாக அமைந்தது. மற்ற ஆழ்வார்கள் பெருமானுடைய அழகில் ஈடுபட்டு இன்பம் நுகர்ந்தனர். அப்பரிமாற்றம் நீங்கிய காலத்து அவர்களுக்கு ஆற்றாமை கரைபுரண்டது. தங்கள் அடிமைத் தன்னை அழியும் வண்ணம் சினத்தாலே "போகு நம்பீ", "கழகம் ஏறேல் நம்பி" என்றனர். தங்கள் அடியார்க்கு அடியனும் தன்மை கெடும்படி அஞ்சிறைப்புள்ளை, 'வெஞ்சிறைப்புள்' என்று வெறுத்துரைத்தனர். ஆனால், பெரியாழ்வார் அவன் அழகினைத் துய்ப்பதில் நெஞ்சு செல்லாதவராய் அதற்கு என் வருகிறதோ என்று கலங்கி 'உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு' என்று அவனுக்குப் பல்லாண்டு பாடியதோடு அவன் அடியார்களாகிய திருமகளுக்கும், சுடராழிக்கும், சங்குக்கும் நன்மைகளைப் பரிந்து வேண்டினர். இதனால் இவருக்கு இருவகை அடிமைத் திறமும் வளரலாயின.

மேலும் இவரது பெரும் பரிவு, அச்சம் போக்குவனவற்றைக் கண்டும் அஞ்சுமாறு செய்த[illegible]. மணிவண்ணன் மல்லாண்ட திண்தோள் கண்டு, அவன் வீரத்தை எண்ணி, அவனுக்குத் தீங்கு வாராது என்று கருதுவதற்கு மாறாக, அத்தோள் வலியை நினைந்து, உதவ[illegible]ாரோடு போரிடப் புகின் என்ன ஆகுமோ என்று கலங்கினார். அவன் மார்பில் தீங்குகளை அகற்றிப் பு[illegible] நன்மைகளைத் தரவல்ல திருமகள் இருப்பது கண்டு அவனுக்குக் கேடு வாராது என்று துணியாமல் அச்சேர்த்திக்குத் தீங்குவரின் யாது செய்வது என்று அஞ்சினார். அச்சேர்த்திக்குக் கல் மதிளிட்டாற்போல இருக்கும் சங்கு சக்கரங்களைக் கண்டு கலக்கம் நீங்காமல், அவற்றிற்குத் தீங்குவரின் யாது செய்வது என்று தவித்தார். அவனுக்கும் அவனோடு தொடர்புடையவர்களுக்கும் நன்மைகளை வேண்டி நின்றார்.

இவர் தாம் மட்டும் பல்லாண்டு பாடினால் போதாதென்று கைவல்யார்த்தி உகந்தவர்களான வாழாட்பட்டு நின்றவர்களோடு செல்வ விரும்பிகளையும் (அர்த்தார்த்தி) கேவலப்பேறு விழைந்தவர்களையும் திருத்தி அதனைப் பாடப் பாங்காக்கிக் கொண்டார்.

மேலும், என்றோ நடந்த செயல்களுக்கு வயிறு எரிந்து அவனுக்கு வாழ்த்துக்கள் கூறினார். இலங்கை அழித்த செயலுக்கு அவனைப் போற்றினார். திருநாட்டில் அ[illegible] அடைந்ததன் பயனும் பல்லா[illegible] பாடுதலே என்றார்.

அவனுக்குப் படைகளை[illegible] அமைந்து இமையாமல் காக்கும் [illegible] ஆழ்வார்களை அவனோடு ப[illegible]ற்றத்தில் இழிந்து அடிமை [illegible]ார்களாக இராமல், உணர்ந்[illegible]க்குபவர்களாக இருக்குமா[illegible]டினார். இப்படி இடையறு[illegible]டு இசைத்தலே பணியாய் இருந்தார்.

பெரியாழ்வாரின் இவ்வேற்றங்களை யெல்லாம், "அவர்களுக்கு (மற்றைய ஆழ்வார்களுக்கு) இது (பல்லாண்டு பா முதல்) காதாசித்கம்; இவர்க்கு (பெரியாழ்வாருக்கு) இது நித்யம்"

"அவர்களுடைய ஆழங்கால்தானே இவர்க்கு மேடாய் இருக்கும்".

"அவர்களுக்கு உபய சேக்ஷத்துவத்தையும் அழித்து ஸ்வரூபத்தைக் குமிழ் நீர் உண்ணப் பண்ணுமது, இவர்க்கு உபய விருத்திக்கும் ஏது வாய் ஸ்வரூபத்தைக் கரையேற்றும்".

"பயநிவர்த்தகங்களுக்குப் பயப்படுவது, பிரதிகூலரையும் அநுகூலர் ஆக்கிக் கொள்ளுவது, அந்த காலங்களில் அபதானங்களுக்கு உத்தர காலத்திலே வயிறு எரிவது, பிராப்தி பலமும் இதுவே என்பது, அநிமிஷரைப் பார்த்துப் 'உறகல் உறகல்' என்பதாய்க் கொண்டு இதுதானே யாத்திரையாய் நடக்கும்" என்று பிள்ளை உலகாரியர் தெரிவித்துள்ளார்.

இந்தப் பொங்கும் பரிவே இவருடைய உயர் இறையன்பு நிலையாகும். இதுவே இவரைப் பெரியாழ்வார் என்னும் சிறப்புக்கு உரியவராக்கியது. இவர் நம்மாழ்வாரைப் போலவும் திருமங்கை மன்னனைப் போலவும் ஆயிரக்கணக்கில் பாசுரம் பாடிய பெருமையோ, சமயத்தலைவராகத் திகழ்ந்த பெருமையோ ஆழ்வார்களுள் முதல் முன்னம் தோன்றிய பெருமையோ உடையவர் அல்லர்; பெரும் பரிவால் வந்த பெருமையே உடையவர். இப்பெருமை எல்லாம் கண்ணன் என்று கருதும் ஞானச் சிறப்பினை யொட்டி அதன் விளைவாக வந்தது. இவ்வடைவு தோன்ற,

"மங்களா சாசனத்தில் மற்றுள்ள
ஆழ்வார்கள்
தங்களார் வத்தளவு தானன்றி—
பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்
பிரான் பெற்றான்
பெரியாழ்வார் என்னும் பெயர்"

என்று போற்றுவர் மணவாளமா முனிகள்.

ஐயமும் தெளிவும் :

இப்படி அறிவு கலங்கிப் பல்லாண்டு பாடுவது பொருந்துமா என்னும் ஐயம் எழலாம். இது புதியது ஒன்றன்று; மேலோர் வாழ்வில் கண்ட முடிவே ஆகும். இரவு பகல் வேறுபாடில்லாமல் சக்கரவர்த்தி திருமகன் தேவர்களைப் பாதுகாத்து வந்தான். அவன் வடிவழகு தொடக்கமான தன்மைகளைக் கண்ட அயோத்தி மக்கள் அவன் பரம்பொருள் என்பதனை மறந்து, அவரால் தங்களுக்கு வரும் நலன்களை மறந்து, அவன் பண்புகளுக்குப் பாதுகாப்பு வேண்டி அவனுக்குக் கீழ்ப்பட்ட தேவர்களின் காலிலே விழுந்தார்கள். இவ்வறிவு கேட்டிற்கு அடியாவது அன்பே.

கற்பின் கனலியைக் காகுத்தன் மணந்து அயோத்தி திரும்பிக் கொண்டிருந்தான். தயரதன் இராம பிரானுடைய ஆற்றலை நன்குணர்ந்தவன். அவன் தாடகையை அழித்த கைவண்ணம் அறிந்தவன். எனினும், பரசுராமனைக் கண்ட பொழுது அஞ்சினான். அவன்பால் தஞ்சம் புகுந்து மயங்கினார். 'பரசுராமன் தோற்று மீண்டு போனான்' என்று கேட்ட பின்பே தெளிவடைந்தான். தானும் தன் மக்களும் மறுபிறவி எடுத்ததாகக் கருதினான். பெருமான் ஆற்றலை உணர்ந்த தயரதன் கலக்கத்திற்கும் அன்பே அடிப்படையாகும். இத்தகைய கலக்கத்தை விசுவாமித்திரன், தண்டகாரணிய முனிவர்கள், திருவடி, சுக்கிரீவன் முதலியோர் பக்கலிலும் உலக வழக்கிலும் காணலாம்.

பல்லாண்டு பாடுவதில், 'எம்பெருமான் பாதுகாவலன்; சேதனன் (மனிதன்) பாதுகாக்கப்படுபவன்' என்னும் உணர்ச்சி (பாவம்) மாறுபடிக் கிடக்கிறது. பெரியாழ்வாருக்கும் பிறருக்கும் உண்டாகிய இக்கலக்கம் வினையடியாக வந்ததன்று; பரம்பொருளின் சிறப்பினால் வந்தது. எனவே பரம்பொருளின் சிறப்புக்கள் இருக்கும்வரை இக்கலக்கமும் இருந்து வரும். வினையால் வரும் அறிவுக் கேடே தள்ளத்தக்கது. பொருட் சிறப்புக் காரணமாக வருவது தள்ளத் தக்கதன்று; கொள்ளத்தக்கதும் கொண்டாடத் தக்கதும் ஆகும். மேலும் தலைவனுக்கு வியப்பை விளைவிப்பதே தொண்டனுக்கு இயற்கை (சொரூபம்) என்பதை நோக்கின் பல்லாண்டு பாடுவதே உயிரின் கடமை என்பது புலப்படும்.

முடிவுரை :

அன்பு நெறி (பக்தி) இறையன்பு, இறையறிவு, உயர் இறையன்பு என்று மூன்று நிலைகளைக் கொண்டது என்பதனையும், ஒன்று மற்றொன்றில் மூள்விக்க வளர்வது என்பதனையும், பெரியாழ்வார் இறையன்பு படி நிலை வளர்ச்சி கொண்டது, பொங்கும் பரிவே அவரது சிறப்பு, அவரது கலக்கம் பொருட்சிறப்பால்வந்ததால் குற்றமன்று, கொண்டாடத்தக்கது என்பதனையும், இப்பல்லாண்டு பாடுதல் வைணவ மரபின் தலையாய கொள்கை என்பதனையும் உணரலாம்.

# பாத பங்கயம்

தரையிலே கிடக்கும் தன்னருமைக் குழந்தையைக் கையிலேந்தி மார்போடணைத்து உச்சி முகர்ந்து கொஞ்சுவது பெற்றவளுக்குத் தாரகம். தன்னிரு பிஞ்சுக்கரங்களாலும் தாயின் தனங்களைப் பிடித்து வாயிலே வைத்துக்கொள்வது குழந்தைக்குத் தாரக போஷகங்களாகும். சேதனர்களாகிய நம்மெல்லோர்க்கும் தாரகமாகவமைந்தது திருமாலின் திருவடிகளே.

ப்ரளய வெள்ளத்திலே மூழ்கி அழியவிருந்தது இவ்வேழ்வுலகங்களும். இப்பேராபத்தினின்றும் காப்பாற்றத் திருமால் ஒரு சிசுவாகி அவற்றையெடுத்து விழுங்கித் தன் வயிற்றிலே வைத்துக்கொண்டான். அவ்வெள்ளத்திலே மிதந்து வரும் ஓர் ஆலந்தளிரிலே களைப்பாறுபவன் போல் சற்றே சாய்ந்து கிடந்தான். தன் திருவடியைத் தன் திருக்கரத்தாலே பிடித்திழுத்து வாயிலே வைத்து விரல்களை இனிதாகச் சுவைத்துக் கொண்டிருந்தான். நான்மறையோ "திருமாலின் திருவடியினின்றும் தேன் போன்று இனிய அமுத வெள்ளம் பெருகுகிறது" என்று முழங்குகிறது. "தேனே மலரும் திருப்பாதம்" (திருவாய் 1-5-5) எனச் சொல்லியவாறு அடியார்கள் இவன் திருவடிகளிலே விழுகிறார்கள். "சர்வ ரஸ:" (सर्व रसः) என்று வேதம் ஓதியவாறு இவன் பரம ரசிகனன்றோ! ஆகவே தன்னடியார்கள் கண்டனுபவித்த இந்த இனிமையைத் தானும் ருசித்துப் பார்க்க வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டான். நீண்டநேரம் அழுதழுது யாரும் கவனிக்காமையால் குழந்தை தன் பிஞ்சுக் கரங்களால் தன் காலை யிழுத்து வாயிலே வைத்து விரலைச் சூப்பிக்கொண்டு கிடக்குமா போலே தானும் தன் திருவடி விரலைச் சுவைத்துக்கொண்டு கிடந்தான். சிறைப்பட்டுக் கிடப்பாருக்கு உணவளிப்பதுபோல் தன் வயிற்றிலே கிடக்கும் உலகங்களுக்கெல்லாம் உணவூட்டுவதுபோல் விருப்போடு தன் திருவடி விரலைச் சுவைத்துக் கொண்டு கிடந்தான். மயர்வற மதிநல மருளப் பெற்ற பெரியாழ்வாரும் இக் காக்ஷிதனை தன் உட்கண்ணால் கண்டு களித்து "பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக் கமலங்கள் காணீரே" (பெரியா. திரு 1-3-1) என அவ் வினிமை தோற்றவருளிச் செய்கிறார்.

"செங்கமலத் திருமகளும் புவியும் செம்பொன் திருவடியினைவருட" (பெரிய. திரு. 7.8.1) எனத் தாமரையில் தோன்றித் தன்னிருப்பிடமாகவும் கொண்டு தாமரை மணத்தாலே பரிமளிக்கும் மலர்மகளும், "பொறுமைக்கோர் பூமி' எனப் போற்றும் படியாய் பொறுமையையே தன்னிருப்பிடமாகக் கொண்டு திகழும் மண்மடந்தையும் அவன் திருவடிகளைப் பிடித்து விடுதலே தங்களுக்குத் தாரகம் என்றிருப்பார்கள். இவனோ அவர்களின் மெல்லிய கரங்களாலே தன் திருவடியினைப் பிடித்து விடுதலே தனக்குப் 'பேரின்பம்' என்றிருக்கிறான்! அடியார்களோ, "கோலமாம் என் சென்னிக்கு உன் கமல மன்னு குறைகழலே" (திருவாய் 4-3-6) எனத் தங்கள் சிரசிலே மலர்க்கிரீடம் வைத்துக் கொள்வாரைப் போல் "சிரோ பூஷணமாகத் தரித்துக்கொள்ளத்தக்க அம் மென்மையான திருவடிகள் காடையும்மோடையும் அளப்பதே" என்று வாய்வெருவுகிறார்கள்.

பரம பாகவதனாகிய பிரகலாதனின் பேரனாவான் மாவலி என்பான். இவன் திருமாலிடம் பக்தியுள்ளவனேயாகிலும் நான்முகனிடம் தான் பெற்ற வரங்களாலே மிக்க மமதை கொண்டு திரிந்தான். இந்திரன் நாட்டையும் வலியச் சென்று பிடித்துக் கொண்டான். குடியிருப்பையிழந்த இந்திரனுள்ளிட்ட தேவர்கள் காலைப் பிடித்துக் காரியங்கொள்ளுவாரைப் போல் திருமாலின் திருவடி சரணமடைந்தார்கள். திருமாலும் இவர்களின் குடியிருப்பை மீட்டுத் தர விசைந்தான். திருவடி பிடித்து விடுதலே தனக்குத் தாரகம் என்றிருக்கும் பூமிப் பிராட்டியின் (மண்மடந்தை) சரீரமெனத் திகழும் பூமியில் தன் திருவடிகளை வைக்கப் போகிறோம் என்பதில் அவனுக்குப் பூரிப்பு! உலகிலே இவன்தான் குள்ளன் எனச் சொல்லப்படும் அவனும் "இவனே குள்ளன்" எனக் கூறும்படியாய் ஓர் குள்ளவுருவை எடுத்துக் கொண்டான். குள்ளர்களும் வெறுக்கும் 'குள்ளன்' எனப் பொருள் படும் "வாமனன்" என்னும் திருநாமத்தைத் தானும் மிக்க விருப்பத்தோடு சூட்டிக் கொண்டான்.

"தன்னையீரு பிளவாகப் பிளந்திடினும் எவருக்கும் தலை வணங்கேன்" என்னும்படி இவன் ஒரு "வணங்கா முடி"யல்லவே. இவனுக்கும் திருமாலிடம் அன்புண்டு. இவனிடமுள்ள ஈகைக் குணம் ஒன்றையே பற்றாசாகக்கொண்டு இவனை வளைப்போம் என வாமனன் தீர்மானித்தான். ஆகவே இவனிடம் யாசிக்கவும் துணிவு கொண்டான். மாவலியோ, 'மண்ணுக்கும் விண்ணுக்கும்தானேகடவன்; இரந்தவர்க்கு இல்லையெனது வாரி வழங்கும் வள்ளல்தானே" என்னும் ஆணவம் தோற்ற யாகசாலையில் வீற்றிருந்தான். படுக்கையாகவும் பாதுகையாகவும் திகழும் அனந்தன், கருத்

திரு. வி. ராகவன் — பள்ளத்தூர்.

தறிந்து செல்லுமிடம் சுமந்து செல்லக் கருடன், எதிரம்புகோர்த்திடுவாரை ஒழித்திடவல்ல சக்கரம் ஆகியோர் இவன் ஏவலுக்குக் காத்துக் கிடக்க, இவனே பரமபதத்தில் தனக்குள்ள மகிமையையும் தன் வல்லமையையும் சிறிதும் கணிசியாது தன் எளிமைக் குணம் பிரகாசிக்கத்தான் தளர் நடையிட்டு மாவலியை நோக்கி நடந்து சென்றான்.

இவ்வாறு வாமனன் தளர் நடையிட்டுச் சென்றபொழுது பூமி குலுங்கிற்றும். இவன் நடக்கப் பூமி குலுங்குவானேன் எனப் பண்டிதர்களிடையே ஓர் வினாவெழுந்ததாம். 'அவன் சர்வேஸ்வரனல்லேயோ? ஆகையால் அவன் நடக்கப் பூமி குலுங்கிற்று' எனப் பதிலிறுத்தனராம். இப் பதிலில் திருப்தியுறாத நஞ்சீயர் என்பார், 'இப்பொருள் பொருத்தமுடையதோ?' வென ஆசார்ய சார்வபௌமராகிய பட்டரை வினவினராம். "போதும், போதும் என வாரி வழங்கும் 'அலம் புரிந்த நெடுந்தடக்கையன்'' ஆன அவன் தன் திருக்கரங்களாலே இரக்க வேண்டியிருக்கிறதேயென்னும் பதற்றத்தோடு நடையிட்டுச் சென்றானதலால் பூமியதிர்ந்தது'' என்று பணித்தாராம். செவிமடுக்க இவ்வைதீகம் எவ்வளவு இனிமையாகவிருக்கிறது! பரமபதநாதன், சர்வேஸ்வரன், வாரி வழங்கும் வள்ளல் எனப் போற்றப்படுபவனேயாகிலும், தனக்காகவன்றி பிறருக்காகவே தான் யாசித்தாலும், அவன் செய்த காரியம் யாசகம் என்பதால் கூனிக் குருகி வாமனனாக வேண்டி வந்தது என்னும் கருத்தை வெகுவழகாக விளக்குகிறது கீழுள்ள வடமொழிக் கவிதை.

" யாசநாஹி புருஷஸ்ய மஹத்வம்
நாசயத்யகில மாசுத்தாஹி |
ஸோபிவிச்வ ஜகதீப திரிசோ
வாமநோ பவதி யாசிது மிச்சந் ‖ "

இரப்பிலே தழும்பேறியவன்போல் "மாவலி! என்காலால் நானளப்ப மூவடி மண்தா'' எனக் கேட்டான். எல்லாம் நிறைந்தவன் தனக்கென்று பிறரிடம் யாசித்துப் பெற வேண்டியது யாதொன்றுமில்லை. தனக்குச் சொந்தமல்லாததைத் தன்னதாகக் கொண்டு திரியும் மாவலியின் ஆணவத்தை அடியோடு ஒழிக்க வேணுமென்றே அவனிடம் யாசிக்கிறான். ஆக எல்லாம் நிறைந்தவன் யாசிப்பது அவனுடைய நீர்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாகவமைந்தது இது. "இப்பாலகன் கேட்பது இவன் காலால் மூவடி நிலம் தானே. எவரும் இதுவரை இவ்வளவு சிறிய வளவில் யாசிக்கவில்லையே. இதனைக் கொடுப்பதால் குடியொன்றும் முழுகி விடாது' என்று மாவலி நினைக்கிறான். தானும் தாரை வார்த்துத் தானம் வழங்கவும் இசைந்தான். தாரை நீர் கையில் விழுந்தவாறே வாமனன் ஓங்கியுயர்ந்து திருவிக்கிரமனாக வளர்ந்தான். இவ்வாறு சிறுக்கவும், பெருக்கவும் யாருடைய தயவையையும் நாடினானில்லை. இச்சை மாத்திரம் கொண்டு சிறு உருவையும் பெருவுருவையும் தேவைக்கேற்றவாறு எடுத்துக்கொண்டான். சரீரம் என்பது எப்பொழுதும் ஒரே நிலையில் இருப்பதில்லை. அதற்கு வளர்தல், தேய்தல், அழிதல் ஆகிய தன்மைகள் உண்டு என்னும் தத்துவத்தை விளக்குவதாகவிது அமைகிறது.

வ்யாக்யான சக்ரவர்த்தி பெரியவாச்சான்பிள்ளையின் இனிமையானதோர் சூக்தி காண்போம். "இந்திரன் கண்ணீர் கண்டு சிரும்பினபடியும், மஹாபலி நீர் வார்த்தவாறே வளர்ந்தபடியும்'' என்பது. நாட்டைப் பறிகொடுத்துவிட்டுத் தன் முன்னே நிற்கும் இந்திரனின் கண்களினின்றும் வழியும் கண்ணீரைக் கண்ட வருத்தத்தால்தான் வாமனனாகச் சுருங்கினான்; மஹாபலி நீர் வார்த்தவளவிலே ஏற்பட்ட வானந்தத்தினால் திருவிக்கிரமனாக வளர்ந்தான் என்பதே இதன் பொருள். இவ்வாறு வளருங்கால் அவனுடைய திருவடிகளும் வளர்ந்தன. அவ்வாறு வளரும் தன் திருவடியை "படிக்களவாக நிமிர்த்த நின் பாத பங்கயம்'' (திருவாய் 9-2-2) என்றவாறு பூமியின் அளவுக்குப் பொருத்தமாகக்கொண்டு பூமிப் பரப்பெல்லாம் ஓர் திருவடியால் அளந்து கொண்டான். காடும் மோடுமான இப்பூமியைத் தன் மென்மையான திருவடியால் அளக்க வேண்டியிருக்கிறதே என்னும் வருத்தமின்றித் தன் பிரிய நாயகியின் சரீரத்தைத் தடவிக் கொடுக்கிறோம் என்னும் உகப்போடே அளந்து கொண்டான். தனக்குத் தாரகமான அவன் திருவடி ஸ்பர்சம் கிடைத்ததேவென்னும் பெருமகிழ்ச்சி பூமிக்கு. தாங்கள் எதிர்பாராதவளவிலும் எல்லோரும் உய்யுமாறு அவன் திருவடிகளைச் சிரசிலே வைத்தானே என்று ஜீவர்களுக்கு மகிழ்ச்சி. இவனே, பக்கத்தே கிடக்கும் குழந்தையைக்கட்டியணைத்துக் கிடக்கும் தாயைப் போலே அஞ்ஞானத்திலே கிடந்துழலும் ஜீவர்கள் தலையிலே தன் திருவடியை வைத்தான். அவனுடைய வாத்ஸல்யம்தான் என்னே!

உலகோர் போன்று ஆண் பெண் உறவின் மூலம் பிறந்தவனல்லன் பிரும்மா. திருமாலின் திருநாபீக் கமலத்தினின்றும் தோன்றியவன். இவ்வாறு தோன்றியிருந்தாலும், மறைகளை அவனிடமிருந்தே கற்றுணர்ந்திருந்தாலும், அதனைப் பிறருக்கு ஓதுவிக்கும் திறமை பெற்றிருந்தாலும், "நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் காணகிலான்'' (முதல் திருவந். 56) என்றவாறு திருமாலின் திருவடியைக் காண முடியாது எப்போது காண்போம் என்றும் ஏக்கத்துடன் இருந்தான். ஆசையுடையார் இருக்குமிடம் எல்லையாகக் கொண்டு வளரும் திருவடிகளல்லவா திருமாலினுடையது? ஆகவே விண்ணளக்கத் தூக்கிய திருவடி சத்தியலோகத்தை எட்டியது. அவ்வளவில் தன் தகப்பனாரின் திருவடியைக்

## தல விருட்சங்களின் பெயரா கொண்ட சில தலங்கள்

தில்லைவனம்.
பாதிரிப் புலியூர்.
பனையூர்.
திருப்பனந்தாள்.
ஆலங்குடி.
நெல்லிக்கா.
ஆலங்காடு.
கடம்பவனம்.
மாந்துரை.

**திருக்கோவலூர் — ஆர். சுப்பராவ்.**

காணப் பெருமகிழ்ச்சி கொண்டான். "குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர் பெய்து மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி" (நான்முகன்திருவந். 9) என்றவாறு "அடியேன் நீசனேன்" என்றெல்லாம் தன் குறைகளைச் சொல்லி புருஷ சூக்த மந்திரங்களைச் செல்லி, சிவந்த இரு கைகளாலும், கைகள் பெற்ற பயனையடையுமாறு திருவடி விளக்கினான். இதனால் அவனும் பெரும் பேறு பெற்றான். திருமாலின் திருவடி ஸ்பர்சம் தனக்கும் கிட்ட வேண்டுமென்று தர்மமும் ஜலரூபமாக பிரும்மாவின் கமண்டலத்துள் புகுந்தது. மேலும் கங்கையாய்ப் பெருக்கெடுத்து திருவடியில் விழுந்தது. "உன்தன் அடி சேர்ந்தருள் பெற்றாளன்றே" (முதல் திருவந். 97) எனத் திருவடியில் விழுந்த காரணத்தால் கங்கை தானும் புனிதமடைந்ததோடு பிறர் பாவங்களையும் போக்கும் பெருமையும் பெற்றாள்!

நிலையில்லாது அழியக் கூடியதான செல்வத்தையே விரும்பும் மாந்தர் போன்று இந்திரனுள்ளிட்ட தேவர்களும் என்றும் குறையாது நிலையான ஆனந்தத்தையளிக்கவல்ல ஆராவமுதமே தங்கள் முன்னிலையில் நின்றும் அவனைக் கண்டு இன்புறாது தங்கள் இருப்பிடத்தையே விரும்பிப் பெற்றுச் சென்றனர். மஹாபலி அசுரனேயாகிலும் அவனிடமுள்ள சிறிதளவு அன்பு காரணமாக, "திரு நிலம் மூவடி மண்வேண்டி உலக மனைத்தும் ஈரடியாலொடுக்கி ஒன்றும் தருகவென்று மாவலியைச் சிறை வைத்த தாடாளன்" (பெரிய. திரு. 3-4-1) என இரண்டடியால் மண்ணையும் விண்ணையும் சுவாதீனப்படுத்திக் கொண்டு மூன்றுமடிக்கு இடமில்லாமையால், ஆணவம் அடியோடு அழியப் பெற்ற மாவலி தன் சிரசையே இலக்காகக் காண்பிக்க, தன் திருவடியை வைத்து அவனைப் பாதாளத்தில் சேர்த்தான். அங்கோர் நல்ல இருப்பிடமும் நிலையான செல்வமும் வழங்கித் தானும் வேறொரு உருக் கொண்டு அவனுக்குக் காவல் பணியும் புரிகிறான்! மாவலி பெற்ற பேறு தான் என்னே!

தீயோரைக் கண்டித்து நல்லோரைக் காத்து தர்மத்தை நிலைநாட்டத் தோன்றியவன் கண்ணன். தொட்டிலிலே கண்ணனைக் கிடத்தி பாதுகாவலாக சகடத்தைப் பக்கத்தே வைத்துச் சென்றாள் தாயான யசோதை. பாதுகாவலாக வைத்த சகடமே ஊர்ந்து வரவாரம்பித்தது. கண்ணனை எவ்விதத்தேனும் கொல்ல வேணும் என்னும் தீய கருத்துக் கொண்டகம்ஸனின் ஏவலால் அசுரன் ஒருவன் அதில் ஆவேசித்திருந்தான். "ஊர்ந்த சகடம் உதைத்த பாதத்தன்" (திருவாய் 5-3-3) என்றவாறு ஒன்றுமறியாப் பாலகனாய்க் கிடக்கும் கண்ணன் பசித்துப் பாலுக்கழுபவன் போல் தன்னிரு கால்களையும் நிமிர்த்தி ஓங்கியுதைத்தான். நான்கு கரங்களோடு சங்கு சக்கரங்களை ஏந்தியனாய்த் தோன்றிய கண்ணனைத் தேவகி, இதனையெல்லாம் மறைத்துக் கொண்டு சாதாரணக் குழந்தையாகத் தோன்ற வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டாள். அவ்வாறே சங்கு சக்கரங்களும் மறைந்திருக்க வேண்டியதாயிற்று. மேலும் இவர்கள் எம்பெருமானுக்கு அசுரர்களால் என்ன தீங்கு வருமோ வெனக் கலக்கம் கொள்ளும்படி ப்ரேமம் கொண்டுள்ளவர்கள். எதற்கும் ஆயத்தமாக அவன் திருக்கரங்களில் எப்பொழுதும் ஏறியமர்ந்திருப்பார்கள். இப்போதோ "ஒரு காலில் சங்கும் ஒரு காலில் சக்கரமும் உள்ளடி பொறித்தமைந்த" (பெரியாழ். திரு 1-7-6) எனக் கண்ணனின் உள்ளங்கால்களில் ரேகையாய்ப் பொலிந்து நின்றார்கள். இவ்வாறு சங்கு சக்கரங்கள் அமர்ந்திருக்கும் திருவடியின் உதைக்கு இலக்கான சகடமும் சின்னாபின்னமாகியது. அதில் ஆவேசித்திருந்த அசுரனும் மாண்டொழிந்தான். இவ்வாறு விரோதிகளை அழித்திடுவதல்லவோ அவனது திருவடிகள்! கன்று காலிகளின் பின்னே சென்ற கண்ணனுக்கு "குடையும் செருப்பும் கொடாதே" (பெரியாழ். திரு. 3-2-9) "வெயில் உறைக்காமே தலைக்குக் குடையும்; கல் முள் குத்தாமே காலுக்குச் செருப்பும் கொடாதே காட்டிற்கு யனுப் பினேனே பாவி" எனத் தன்னை நொந்து கொள்ளுகிறாள் யசோதை. அவளுடைய அஞ்ஞானம்தான் என்னே!

பாரதப் போர் நடக்கவிருக்கும் தருணம். துரியோதனனும் அர்ஜுனனும் கண்ணனின் ஒத்தாசை வேண்டி அவனைப் பார்க்கத் துவாரகைக்கு வருகிறார்கள். அவ்வமயம் கண்ணன் ஆழ்ந்த துயில் கொண்டிருக்கிறான். தான் ஒரு நாட்டின் சக்ரவர்த்தியெனக் காட்டிக்கொள்ளும்வண்ணம் துரியோதனன் கண்ணனின் திருமுடிப்பக்கம் ஓர் ஆசனத்திலமர்ந்தான். அடியானை அர்ஜுனனோ கை கூப்பிய வண்ணம் பவ்யனாக திருவடிவாரத்திலே நின்று கொண்டிருந்தான். துயில் கலைந்து எழுந்ததும் கண்ணன் முதலில் பார்த்தது அர்ஜுனனையே. அர்ஜுனன் சமினை செய்யப் பின்னர் துரியோதனனைப் பார்த்தான். "முதலில் வந்த என் காரியத்தை முதலில் கவனிக்க வேண்டும்" என்று

**(40-ம் பக்கம் பார்க்க)**

சிறுவர் பகுதி

# ‘அமரநாத் கீ ஜெய்’

பெரிய திருவடி எனும் அப்பெரிய வரைச் சுற்றி - எதிரே துளசி தீர்த்தம், திராட்சை, மா, பலாச்சுளைகள்' கற்பூர - நேத்திர - பூவன் - பச்சை வாழைப் பழங்கள் ஆகியவைகள் இருந்தன. ஏராளமான சிறுவர் சிறுமிகள் கையுடன் கொண்டு வந்த தின் பண்டங்களைத் தாத்தாவின் எதிரே வரிசையாக வைத்து விட்டு ஆவலுடன் அவர் முகத்தையே நோக்கினர், அன்று அவர் கூறப் போகும் கதையைக் கேட்க. மகிழ்ச்சி-சந்தோஷம்-ஆனந்தம் அனைவர் முகங் களிலும்! தமக்கு எதிரே இருந்த ஸ்ரீவெங்கடாஜலபதி படத்திற்கு அவற்றைக் கொண்டு தூபதீப நைவேத்தியம் செய்தார். பின் அனைவருக்கும் விநியோகித்தார். எல்லோரும் வாங்கி உண்டு மகிழ்ந்தனர். போட்டிப் போட்டுக் கொண்டு, எல்லோரும் அமர்ந்தபின்-

‘செல்வங்களே! இன்று புதியதாக ஓர் ஈசனை-சர்வேசனை-மகேஸ்வரனைப் பற்றி சொல்லப் போகிறேன்......' என்று ஆரம்பித்தார், பெரிய திருவடிஜி.

ஆர்வமுடன் இன்னும் நெருங்கி வந்து அமர்ந்தனர், சிறுவர்களும் சிறுமிகளும்.

‘பஞ்ச பூத ஸ்தலங்கள் என்னென்ன தெரியுமோ'?

‘தெரிந்தால் சொல்லுங்கள் பார்ப்போம்...'

‘திருவாரூரிலும், காஞ்சிபுரத்திலும் மண்ணுருவம்'-என்றாள் கங்கா.

‘திருவண்ணாமலையில் அனல் உருவம்'-என்றாள் வளர்மதி.

‘திருவானைக்காவில் நீர் உருவம்'-என்றான் கண்ணன்.

‘திருக்காளத்தியிலே காற்று உருவம்' என்றான் வெண்மதியோன்.

‘தில்லையிலே ஆகாய உருவம்'-என்றான் பரம்சோதி.

‘பேஷ்...பேஷ்.. அருமையா சொல்லிட்டீங்க... மண்ணுமில்லாம, நெருப்புமில்லாம நீருமில்லாம, காற்றுமில்லாம, ஆகாய ரூபமுமில்லாம...' ‘ஐஸ் ரூபமாக' இருக்கிறார். எங்கே தெரியுமோ?' - வினவினார் பெரிய திருவடிஜி.

‘எங்கே? எங்கே?' திருப்பி வினவினர்.

‘திருவானைக்காவில் உள்ள கருவறையில் எப்பொழுதும் ஜலம் அள்ள அள்ள குறையாமல் நிறைந்து இருக்கும். அந்த ஜலத்திற்கு நடுவே தான் ஜம்புகேஸ்வரராக வடிவம் கொண்டு சிலை உருவில் அருள் பாலிக்கிறார். ஆனால் சிலை உருவை முழுக்க முழுக்க நீர் வடிவினன் என்று கூறுவதற்கு இல்லை.'

‘ஆமாம் ஆமாம் முழுக்க முழுக்க நீர் வடிவிலேயே இருக்கும் உருவத்தைக் காண முடியுமா?'

‘ஓ! காண முடியும்' ‘ஐஸ்' உருவத்தில்...'

‘எங்கே... எங்கே...? ஜி!'

‘அமரநாத்தில். அங்கேதான் ஈஸ்வரன் ‘ஐஸ்வடி'வாகத் திகழ்கிறான். பக்கத்தில் உள்ள அமரநாத் ஈசன் திருஉருவப் படத்தைப்பாருங்கள்...' என்று கூறி ஒரு புகைப்படத்தைக் காட்டினார்.

‘ஆஹா. மிகயும் நன்றாக இருக்கிறதே ஜி, இது ஒரு குகை போன்று அல்லவா இருக்கிறது?'

‘ஆமாம். அது ஒரு மிகப் பெரிய குகைதான்'

‘சரி. ஜி... அமரநாத்திற்கு எப்படி பயணம் செய்வது? அதை விளக்கிக் கூறுங்கள்... ஜி!...' என்றனர் வெகு ஆவலுடன்.

‘அதுதான் கொஞ்சம் கஷ்டம். கஷ்டமான யாத்திரைதான்...' என்றார் பெரிய திருவடிஜி.

‘கஷ்டம்' என்று எதுவுமே இல்லேஜி. முயற்சி திருவினை ஆக்கும்... மேலே சொல்லுங்க... ஜி!...' என்றனர் கோபாலகிருஷ்ணனும், ஆண்டாளும். ‘ஓஹோ! அப்படியா' நல்லது. இமயத்தின் சிகரத்திலே கயிலாயம், கேதாரநாதம், பத்ரிநாதம் பசுபதிநாதம், அமரநாதம் ஆகிய ஐந்து சேஷத்திரங்கள் இருக்கின்றன. இவற்றில் பத்ரிநாதம் ஒன்றே ஸ்ரீமந் நாராயணனுக்கு அமைந்தது. மற்ற நான்கும் மகேஸ்வரனுக்கு உரிய சிவ க்ஷேத்திரங்களே.'

‘கைலாயம்... எங்கே இருக்குஜி!?'

‘திபேத்தில் இருக்கிறது.'

‘ஓஹோ! பசுபதிநாதம் எங்கே உள்ளது?'

‘அது நேப்பாளத்தில் உள்ளது, மற்றவை தான் நம் பாரதத்தில் உள்ளன. இந்த க்ஷேத்திரங்களை எல்லாம்-எல்லோரும் தரிசிக்கும் வாய்ப்பு இல்லை. ஏதோ பூர்வ புண்யம் வேண்டும்; நல்ல உடல் வலிமையும், உள்ள உறுதியும், கையில்...... பையில் நிறைய பணமும், எப்பாடு பட்டாவது ஈஸ்வரனைக் காண வேண்டும் என்ற மனமும் வேண்டும்.' என்றார் பெரிய திருவடிஜி.

‘அப்படி என்றால் எப்பொழுது சென்று தரிசிக்கலாம்?' வினவினான் விநாயக மூர்த்தி.

‘நினைத்த நேரத்தில் சென்று தரிசிக்க முடியாது. வருஷத்தில் ஆறு மாதம் நல்ல உறை பனி. எங்குப்

(3௦-ம் பக்கம் பார்க்க)

# பக்திக்கு இற(ர)ங்கி வந்த பரந்தாமன்

திருமால் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருந்தான். அவருடைய பொற்பாதங்களை ஸ்ரீதேவியும், பூதேவியும் வருடிக் கொண்டிருந்தார்கள்.

நான்முகன் நாராயணனை எண்ணித் தவம் இருந்தான். இதனை அறிந்த நாராயணன் சேஷ சயனத்திலிருந்து இறங்கி வந்தான். சதுர்முகனின் தவத்தை மெச்சி, பரந்தாமன் படைப்புத் தொழிலைப் புரிந்து வர அருளினான்.

பள்ளி கொண்ட பரந்தாமன், பிரம்மனின் தவத்திற்கு இரங்கி-இறங்கி வந்தான்.

வேத விதிப்படி பிரம்மனின் வேலை தொடங்கியது. பதினான்கு லோகங்கள் படைக்கப்பட்டன. படைக்கப்பட்ட லோகங்களை பரந்தாமன் பரிபாலிக்கத் தொடங்கினான்.

இத்தருணத்தில் பிரளயம் தோன்றிற்று. பிரளய காலத்தில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள் அனைத்தும் அழியத் தொடங்கியன. இதுதான் சமயம் என அறிந்த இரணியாட்சன், பூமியைப் பாய்போல சுருட்டிக் கொண்டு பாதாளத்தில் ஒளித்து வைத்து விட்டான்.

இரண்யாட்சன் செய்கையை அறிந்த நாராயணன் வராஹவதாரம் எடுத்து அவனையும் கொன்று, தனது கோரப்பற்களில் ஒளித்து வைக்கப்பட்ட பூலோகத்தை தாங்கி வந்தார்.

நான்முகனின் வேண்டுதலுக்கு இணங்கி பூலோகத்தில் நிரந்தரமாக அருள்பாலிக்க எண்ணம் கொண்டார் பரந்தாமன். சேஷாசலத்தைத் தேர்ந்தெடுத்து அங்கேயே அமர்ந்தார்.

சேஷாசலம் என்பது ஆதிசேஷ வடிவத்தில் இருப்பதாகும். இச்சேஷாசலத்தை-வேதங்கள் நிறைந்திருப்பதால்-வேதாசலம் என்றும், கருடாழ்வார் தாங்கி வந்தபடியால் கருடாசலம் என்றும், விருஷபா அசுரனை சம்ஹாரம் செய்து அவனது திருவுள்ளப்படியாக விருஷபாத்ரி என்றும் பெயரிட்டு அனுக்ரஹித்தார். இவை யாவும் கிரதயுகத்தில் நடந்தது.

திரேதாயுகத்தில் அஞ்சனாதேவி இத்தலத்தில் தவமிருந்து ஆஞ்சனேயனைப் பெற்றபடியால் 'அஞ்சனாத்ரி' என்ற திருநாமத்தோடு விளங்கியது.

துவாபர யுகத்தில் ஆதிசேஷனும் வாயு தேவனும் சேர்ந்து ஆனந்த பர்வதத்தைக் கொண்டு வந்தமையால், 'ஆனந்தகிரி' என்றாயிற்று.

இக்கலியுகத்தில் 'வேங்கடாசலம்' என்ற திருப்பெயரையும் பெற்று போற்றப்பட்டு வருகிறது.

இப்படியாக பரந்தாமன் தனது பக்தர்களுக்காக. மனம் இரங்கி-சேஷ சயனத்திலிருந்து இறங்கி-சேஷாசலம் என்ற வேங்கடாசலத்திற்கு வந்தான்.

வேங்கடாசலம் உயர்ந்தமலை. ஏழு மலைகளைத் தாண்டி உயர்ந்த மலைகளில் ஏறிப்போய்த்தான் அவனைத் தரிசிக்க வேணும்.

சேஷாத்திரி என்ற வைணவ பக்தர் எப்போதும் ஏழுமலை நாதனையே எண்ணி வழிபடுபவர். இவர் தஞ்சை மாவட்டத்தில் உள்ள மஞ்சக்குடி தலத்திற்கு அருகில் செல்லும் குடமுருட்டி ஆற்றுக்குப் பக்கத்தில் உள்ள க்ஷீரபுரம் என்ற ஊரில் வசித்து வந்தார்.

இவர் ஒவ்வொரு புரட்டாசி மாதமும் கால்நடையாகவே சென்று திருமலை நாதனை சேவித்து வந்தார். காலம் இப்படியாகவே இனிமையாக கடந்தது.

ஒரு முறை இவர் புரட்டாசி மாதத்தில் க்ஷீரபுரத்தைவிட்டு கால்நடையாகப் புறப்பட்டார். திருமலையின் அடிவாரத்தையும் வந்தடைந்தார்' க்ஷீரபுரத்தை விட்டுப் புறப்பட்டு வந்த சேஷாத்திரியாருக்கு க்ஷீண நிலையின் காரணமாக மலையின்மீது ஏற முடியவில்லை. எம்பெருமான் தரிசனம் கிடைக்காமல் போய் விடுமோ என்ற கவலையோடு மலை அடிவாரத்திலேயே படுத்துறங்கி விட்டார்.

எம்பெருமான் அவரது கனவில் தோன்றி,

'பக்தா, வருந்த வேண்டாம். நீ, சிரமப்பட்டு இம்மலைமீது ஏறி வர வேண்டாம். நீர் உடனே உமது சொந்த இருப்பிடம் திரும்பும். உமக்காக-உமது பக்தி சிரத்தைக்காகயாமே, உம்முடைய வசிக்கும் தலத்திற்கு வந்து சேருகிறேன். நீர் உடனே உமது சொந்த ஊருக்குச் செல்லும் என்று பணித்தார்.

---

திரு. எம். எஸ். பிச்சுமணி,
சென்னை-56.

---

கனவு கலைந்து எழுந்த பரந்தாமனின் பக்தன், தனது சொந்த இருப்பிடத்திற்குத் திரும்ப கால்நடையாகப் புறப்பட்டார்.

இதே சமயம் பரந்தாமன் மற்றொரு பக்தனான ஸ்தபதியின் கனவில் தோன்றினார். ஸ்தபதி வசித்து வந்த இடம் கன்னரப் புதுக்கொடி. ஸ்தபதியின் கனவில் தோன்றிய பரந்தாமன் 'அன்பனே, என்னுடைய திருவுருவத்தை பஞ்சலோகத்தில் வடிவமைத்து, சேஷாத்திரி சுவாமிகளிடம்

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 | மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, | —சுத்தி, ஏகாந்தசேவை |

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு) |

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

**ஆர்ஜித நைவேத்தியங்கள்**

| | | |
|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- |

**ஆர்ஜித சேவைகள்**

| | |
|---|---|
| (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தோலோற்சவம் (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | ரூ. 160/- |
| (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |

(அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்)

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

சேர்ப்பித்துவிடு' என்று ஆக்ஞை பிரபித்துவிட்டுத் திருமலைக்கு மீண்டும் சென்று விட்டார்.

வேங்கடவனின் வேண்டுகோள்படி (திருவாய் மொழியின்படி) திருவுருவமும் செய்து, கால்நடையாகவே வந்து கொண்டிருந்த சேஷாத்திரி சுவாமிகளின் திருக்கரத்தில் சேர்ப்பித்துவிட்டார்.

சேஷாசலம் நோக்கி சென்று கனவு கண்டபின், திரும்பவும் தன் சொந்த இருப்பிடம் வந்து கொண்டிருந்த சேஷாத்திரி சுவாமிகளுக்குத் தனது கனவு பலித்தது கண்டு உள்ளம் பூரித்தார். க்ஷீராப்திநாதனுக்கு, க்ஷீரபுர அன்பர்களோடு சேர்ந்து, அவர்களின் உதவியோடு திருக்கோவில் ஒன்று கட்டித் திருவுருவத்தையும் பிரதிஷ்டை செய்தார்.

பரந்தாமன் தனது பரம பக்தனுக்காக, திருமலையிலிருந்து மனமிரங்கி-இறங்கி வந்து-பக்தனின் சொந்தத் தலத்திலேயே தங்கினுன்.

ஒரு முறை காசிராஜன் தீராத வயிற்று வலியினுல் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான். இவன் பரந்தாமனின் பரம பக்தன். தன்னுடைய உடல்நிலை குறித்து வேங்கடவனிடம் வேண்டினுன்.

'ஹே! பரம தயாளா! அடியேன் தீராத வயிற்றுவலியுடன் கஷ்டப்படுகிறேன். உம்முடைய ஆலயத்திற்குச் சந்தனத்தினுலான தேர் ஒன்றைச் செய்து சமர்பிக்கிறேன். என்னுடைய நோய் நீங்குமாறு அருள் புரியப்பா' என்றுன்.

பரந்தாமனுக்குத் தேர் பூர்த்தியாகி விட்டது. அப்போது இரண்டு சந்தன அச்சுக் கட்டைகள் மிஞ்சின.

அன்றிரவு மன்னனுன காசிராஜன் கனவில் கலியுகவரதன் தோன்றினுன்; 'மன்னனே! உமது பக்தி எம்மை மனம் குளிரச் செய்தது. உமக்கு வரம் அளிக்க விரும்புகிறேன். தேர் செய்யும் போது மிஞ்சிய இந்த

இரண்டு சந்தன அச்சுக் கட்டைகளை எடுத்துச் செல்லும். நீர் எடுத்துச் செல்லும் வழியில்-உறங்காப்புளியும்-ஊருக்கிணறும் உள்ள தலம் தென்படும். அத்திருத்தலத்தில் இந்த இரண்டு சந்தனக் கட்டைகளையும் கொண்டு பெருமாளை பிரதிஷ்டை செய்து ஆலயம் அமைத்து விடும். உமது தீராத வயிற்று வலியும் தீரும். ஆரோக்யமும், பல்லாண்டு புகழும் பெறுவாய்' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

வேங்கடவனின் வேண்டுதலை கனவில் கண்ட காசிராஜன் இரண்டு சந்தனக் கட்டைகளையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டான். தக்ஷிண பிரதேசத்தில் (தென் பாரதம்) பிரவேசித்தான். ஸ்ரீ வைகுண்டம்-ஆழ்வார் திருநகரி - திருச்செந்தூர் செல்லும் சாலையில் போய்க் கொண்டிருந்தான். அப்போது கனவில் கண்ணன் சொன்ன உறங்காப்புளியும் ஊருக்கிணறும் தென்பட்டது. அத்திருத்தலத்தில் ஒரு சிறிய குன்றும் தென்பட்டது. அக்குன்றின்மேல், சந்தனக் கட்டைகளைக் கொண்டு எம்பெருமானை பிரதிஷ்டை செய்தான். அரசனின் தீராத நோயும் தீர்ந்தது. அரசனின் நோய் தீர்க்க பரந்தாமன்-பக்திக்குக் கட்டுப்பட்டு இத்தலத்திற்கு மனமிரங்கி, தான் வாசம் செய்யும் திருமலையிலிருந்து இச்சிறு மலைக்கு வந்து இறங்கினன். இத்தலமே கருங்குளம் ஆகும். பக்திக்கு மனமிரங்கி, இறங்கி வந்த பரந்தாமனின் கருணை உள்ளம் பக்தர்களுக்கே பரிபூரண கடாக்ஷத்தை அளிக்கிறது.

முன்னொரு சமயம் தஞ்சாவூர் பகுதியில், ஒரு பக்தருக்குத் திடீரென்று கண் பார்வை போய்விட்டது. அச்சமயத்தில் இவருக்கு ஒரு அழகான விக்ரஹம் கிடைத்தது. அந்த விக்ரஹத்தை என்ன செய்வது என்று தெரியவில்லை. இந்த பக்தர் எப்போதும் வேங்கடவனை நினைத்து வழிபடுபவர். வேங்கடவனின் திருமுகமண்டலம், புறக்கண் இழந்த பக்தரின் அகக்கண்களில் காட்சியளித்தது.

'அன்பனே! இந்த விக்ரஹத்துடன் நீர் செல்லும். எந்த இடத்தில் இந்த விக்ரஹம் வைத்து பின்பு மீண்டும் எடுக்காமல் போய்விடுகிறதோ-அத்திருத்தலத்திலேயே, இவ்விக்ரஹத்தை பிரதிஷ்டை செய்து விடும். அப்போது உமது பார்வை பூர்ண பிரகாசத்தோடு விளங்கும்.' என்று சொல்லி மறைந்தார்.

பரந்தாமனின் பரம கருணை பக்தனுக்குக் கிட்டிவிட்டது. வேங்கடவனின் வேண்டுகோளின்படி விக்ரஹத்தை எடுத்துச் சென்றன். ஒரு இடத்தில் வைத்துவிட்டு, சற்று சிரம பரிகாரம் செய்தான். களைப்பு நீங்கி விக்ரஹத்தை மீண்டும் எடுக்கப் போகும் போது எடுக்க முடியவில்லை. இத்திருத்தலமே உகந்ததலம் எனக் கருதி,வேங்கடவனின்கட்டளையின்படி வேங்கடாஜலபதியை பிரதிஷ்டை செய்துவிட்டார். அன்பரது புறக் கண்கள் பிரகாசம் பெற்றன. அத்தலமே 'புலி வலம்' என்ற புண்ணியத் தலமாகும்.பரந்தாமனின் பரமகருணை பக்தனுக்குக் கிடைத்தது.

திருமலையிலிருந்து எம்பெருமான் பிரத்தியக்ஷமாக திருக்கோவில் கொண்டுள்ள இத்திருத்தலத்திற்கு வியாக்ரபாத முனிவர் வந்து தரிசித்துப் போனர். வியாக்ரபாத முனிவர் எப்போதும் புலி உருவில் இருப்பாராம். புலிஉருவில் வலம்வந்தபடியால் 'புலி வலம்' ஆயிற்று. இப்படியாக பக்தர்களுக்கு மனம் இரங்கி-பக்தர்களுக்காகவே இறங்கி வருகிறன் பரந்தாமன்.

ஒரு சமயம் சுமதி என்ற மன்னன் திருமலைக்குச் சென்றன். அங்கு ஸ்ரீநிவாஸனை நினைந்து ஆனந்த தரிசனத்தில் ஆனந்தம் ஏற்பட்டு மெய் மறந்து நின்றன்.

அரசனின் திருவுள்ளத்தில் ஓர் ஆசை உதித்தது. 'திருமலை வாசன்-அன்று பார்த்தனுக்குச் சாரதியாக வந்தானமே. அதைப் பார்க்கும் பாக்யம் நமக்கு இல்லையே' என்று ஏங்கினன்.

மன்னனின் மதுர பக்தியை மணவாளன் அகம் மலர ஏற்றன். 'அரசனே உமது அந்தியந்த அபிலாட்சை பூர்த்தியாகும். யாம்-உமக்கு 'பார்த்த சாரதியாக' பிருந்தாவன தலத்தில் சேவை சாதிப்போம்' என்று அசரீரியாக அருள்பாலித்தான்.

அரசனும் அசரீரியாக உதித்த தலத்தை நோக்கி நடந்தான். பிருந்தாரண்ய க்ஷேத்திரம் வந்தடைந்தான். அத்திருத்தலத்தில்-வேங்கடவன்-வேங்கடக் கிருஷ்ணனுக-பார்த்த சாரதியாக எழுந்தருளி பலராமன்-சாத்யகி - ருக்மணி - பிரத்யும்னன் - அநிருத்தன் ஆகியோருடன் காட்சியளித்தான்.

பார்த்தனுக்குச் சாரதியாக அமர்ந்தபோது, தன் திருக்கரங்களால் ஆயுதங்களைத் தொட மாட்டேன் என்று சபதம் கொண்டார். அந்த சபதப்படியாக, அவரது திருக்கரங்களில் ஆயுதம் இல்லை. வலது திருக்கரத்தில் சங்கமும், இடது திருக்கரம் வரத முத்திரையோடும் விளங்குகிறது. திருவல்லிக்கேணி தலத்தில் இன்றும் இத்திருமேனியைக் காணலாம்.

கலியுக வரதன்-கலியுகத்தில் திருமலையில் அமர்ந்தான். பக்தர்களின் பரந்த உள்ளத்தை பரந்தாமன் அறிந்தான். பக்தர்கள் விரும்பியபடி பக்தர்களுக்கு அருள்பாலித்தான்-பக்திக்கு பரமனும் ஒன்றுதான்-புலியாளும் மன்னனும் ஒன்றுதான் என்பதை எடுத்துக்காட்ட க்ஷீரபுரம், கருங்குளம், புலிவலம், திருவல்லிக்கேணி தலத்திற்கு பரந்தாமன், பக்தனுக்கு பரமானந்தம் அளிக்க மனமிரங்கி, இறங்கி வந்தான்.



# தேர்ச் சிறப்பு

*திரு. S நாராயணசுவாமி* M.A., M.Ed.,
*திருவாவடுதுறை.*

திருக்கோயில்களில் சிறப்புடையத் திருவிழா தேர்த் திருவிழாவாகும். தேர்திருவிழா முடிந்தவுடன் மறுநாள் தேரில் பவனி வநத தெய்வத் திருமேனிகள் தீர்த்தம் கொடுத்தருளுவது இன்றும் இருந்து வருகிறது. தேரானது மேரு மலையினைக் குறிப்பது என்றும், கைலாய மலையினைக் குறிப்பது என்றும் அறிஞர்கள் கூறுவர்.

ஜாதி, மதம் என்று பாராமல் பரமனை அலங்கரித்த தேரில் வைத்தும், 64 கலைகளும் ஒரு சேர அமையப் பெற்றதும் நான்கு வேதங்களாக நான்கு சக்கரங்களும் பிரமதேவன் சாரதியாகவும் அமையப் பெற்ற தேரினை மக்கள் அனைவரும் இழுத்து நிலை நிறுத்தும் உற்சாகம் இருக்கின்றதே அதுவே உன்னதமாகும்.

**தேரின் இலக்கணம் :**

தேர்களில் 1. சட்டத்தேர், 2. வட்டத்தேர், 3. உருண்டையான மேலமைப்புள்ளதேர், 4. கல்தேர், 5. சதுரத்தேர் முதலியன சில அமைப்புகள் ஆகும்.

குறிப்பாக சிவாலயங்களிலும், வைஷ்ணவ ஆலயங்களிலும் காணப்படும் திருத்தேர்கள் எண்ணிலா கலை நுணுக்கங்களுடன் விளங்குகின்றன.

இருக்கு வேத காலத்திலேயே தேரின் கடையாணி போன்ற நுண்ணிய பாகமும் பேசப்படுகிறது. கடோபநிஷத்தில் தேர், தேர்ப் பாகன், குதிரை முதலியவை மனிதனுடைய உடல் புலன்கள் இவற்றிற்கு ஒப்பிட்டுச் சொல்லப்படுகிறது. மானசாரம் எனும் சிற்ப நூல் தேரின் இலக்கணத்தினை விரிவாக விளக்குகிறது.

பிற்கால கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலிருந்தும் தென்னிந்தியாவில் 10-11 ஆம் நூற்றுண்டிலிருந்தே திருக்கோயில்களில் தேர்விழா நடத்துவது வழக்கமாகிவிட்டது. விஜய நகர சாம்ராச்சியம் செழித்திருந்த காலத்தில் தேர்த்திருவிழா சிறப்புற்றது. சிதம்பரம், திருவிடைமருதூர், மதுரை, திருப்பதி, இராமேசுவரம், திருவண்ணாமலை முதலிய தலங்களில் ஆண்டில் பல தடவைகள் தேரோட்டம் நடக்கின்றன.

தேரிலே மிகச் சிறப்புடையது திருவாரூர் தேர் (ஸ்ரீ தியாகராஜர் திருக் கோயில்) ஆகவே 'திருவாரூர் தேரழகு என்றும்', திருவிடைமருதூர் தெருவழகும்' என்பர். மேலும் திருவாரூர் கோயிலில் உள்ள 'கல்தேர்' (மனுநீதி கண்டசோழன் தேர்) பூரி (ஒரிசா மாநிலம்) ஜகந்நாத சுவாமி கோயில் தேர் சிறப்புடையன.

**அளவு :**

தேரானது பல தட்டுகளை உடையது. ஒவ்வொரு தட்டும் சாதாரணமாக 8 முதல் 10 கோணங்கள் உள்ளதாகும். வட்ட வடிவமான தேர்கள் ஒரு சில ஊர்களில்தான் உண்டு.

தேரின் அளவை முழுத்தேர், முக்கால் தேர், அரைத்தேர் என்று தேர் செய்வோர் கூறுவர். தேரின் மேல் கால்களை நிறுத்தி திருக்கோயின் விமானம் போல கலசத்துடன் அமைத்துச் சுற்றிலும் பல வண்ண வரைப்படம் உள்ள தேர்ச்சீலைகளைக் கட்டுவர்.

கடவுளின் கோயிலைப் போன்ற அமைக்கப்பட்ட தேரின் அடிப்பாகத்தில் பூலோகம், புவர்லோகம், சுவர்க்க லோகம் என்ற மூன்று உலக வாழ்க்கையினையும் சித்தரிக்கும் வகையில் சிற்பங்கள் அமையும்.

**கல்தேர்ச் சிறப்பு :**

மரத்தேர்கள் எவ்வளவு சிறப்புடையதோ அதுபோலவே கல்தேரும் தமிழ் நாட்டில் சிறப்புடையது. 11ம் நூற்றுண்டு வரை தமிழ்நாட்டுக் கோயில்களின் கருப்பக்கிருக முன் மண்டபம் சாதாரண நிலையிலிருந்து அந்நூற்றுண்டின் இறுதியில் கல்லாலான சக்கரங்கள், குதிரைகள், யானைகள் முதலியன சேர்க்கப்பட்டு தேர் போன்ற உருப்பெற்றது.

இவ்வகைக் கல் தேர்களில் 12ம் நூற்றுண்டில்கட்டப்பட்ட தாராசுரம் கோயில் (ஐராவதேஸ்வரர்) மற்றும் தில்லைக்(சிதம்பரம்) கோயில், கும்பகோணம் நாகேஸ்வரன்கோயில்விருத்தாசலம் முதலான கோயில்கள் மிகச் சிறந்தனவாகும். கல்தேர் செய்யும் வழக்கம் தமிழ்நாட்டில்தான் முதலில் தொடங்கப் பெற்றதற்கு மேற்கூறிய கோயில்களே ஆதாரமாகும்.

வடநாட்டில் சூரியனுக்காக எழுப்பப்பட்ட 'கோனுர்க்' எனும் இடத்தில் உள்ள கல்தேர் 14-ஆம் நூற்றுண்டிலும், விஜயநகர சாம்ராச்சியத்தின் தலைநகராய் விளங்கிய 'ஹம்பி' எனும் ஊரில் உள்ள விட்டலராய கோயில் கல்தேரும் சிறப்புடையன.

**அண்மைக் காலம் :**

தேரின் சிறிய வடிவமாக நுண்ணிய வேலைப்பாடுகளுடன் மரத்தினால் ஆக்கப்பட்டு அதன்மேல் வெள்ளி அல்லது தங்கத் தகடு போட்டு (ரதம் என்றும் சொல்வர்) மாடுகள் பூட்டியும் அல்லது வேண்டுதல் காரணமாக ஆட்களை இழுப்பார்கள். இவ்வகையில், திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்க சுவாமிதிருக்கோயில் (வெள்ளித்தேர்) (திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது), பழனி, (தங்கரதம்) திருச்செந்தூர், மதுரை, இராமேஸ்வரம், திருப்பதி, திருவண்ணாமலை கோயில்தேர்கள்சிறப்புடையனஆகும். இந்த நூற்றுண்டில் தமிழ்நாட்டின் தலைநகர் சென்னையிலே 'திருவள்ளுவர் கோட்டத்தில்' 133 சிற்பங்கள் கொண்டதும், நான்கு சக்கரங்கள், இரண்டு யானைகள் கொண்ட கல் தேர் காண்பவர்களை வியக்க வைக்கிறது. உடலின் தத்துவத்தை கொண்டது திருத்தேர் ஆகும். சைவம், வைஷ்ணவம் என்ற பேதமில்லாமல் தேரில் உள்ள சிற்பங்கள் பரமனின் திருமேனிகளைத் தரிசிக்கச் செய்கின்றது.






# இராமாவதாரமும் கிருஷ்ணவதாரமும் - ஓர் ஒப்பு நோக்கு

முன்னுரை :

இராமன் கதையையும், கிருஷ்ணன் கதையையும் அறியாதவர்கள் அநேகமாக பாரத தேசத்தில் இருக்க முடியாது. இருப்பினும் இவ் இருவர்களுடைய அவதாரங்களிலும் காணப்படும் ஒற்றுமைகள், குண சேஷ்டிதங்கள், உபதேசங்கள் ஆகியவற்றைத் தொகுத்து, எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ளவேணும் என்ற நோக்குடன் இக்கட்டுரை எழுதப் படுகிறது.

இராமாவதாரம் திரேதாயுகத்தில் ஏற்பட்டது. அவதாரம் என்ற சொல்லுக்கு, 'இறங்கி வருதல்' என்று பொருளாகும். இறங்கி வருதல் என்றாலே, மேலிருந்து கீழ் இறங்கி வருதலைக் குறிக்கும். இங்கு பகவானை ஸ்ரீமந் நாராயணன், துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனத்திற்காகவும், தர்மத்தை அனுஷ்டித்துக் காட்டவும், தர்மத்தை நிலை நிறுத்தச் செய்வதற்காகவும், வைகுண்டத்தை விட்டுப் பூவுலகிற்கு வந்து மனிதனாக அவதாரம் செய்ததைக் குறிக்கும். அதாவது பகவான் 'சௌசீல்யம்' என்ற மகத்தான குணத்தை அனுஷ்டித்துக் காட்டவே, தான் மிகமிக உயர்ந்த இடமான ஸ்ரீவைகுண்டத்தில் ஸர்வ சக்தனாய், ஸர்வக்ஞனாய் இருந்தாலும், அந்த குணங்களை வெளிக் காட்டாமல், தான் மிகவும் எளிமையாக, சாதாரண மனிதனாக தசரதருக்கு புத்திரராய் அவதாரம் செய்ததையே காட்டுகிறது. இந்த அவதாரத்தைக் கூறும் இதிகாசத்திற்கு, 'ஸ்ரீமத் ராமாயணம்' என்று பெயராகும்.

இங்கு நாம் முக்யமாக கருத்தில் கொள்ள வேண்டியது என்னவென்றால், தான் அவதாரம் செய்யும் போதெல்லாம், பகவான் பிராட்டியையும் கூடவே அவதாரம் செய்யும் படி நியமனம் செய்தே அவதரிக்கிறான். எம்பெருமான் பிராட்டியை விட்டுத் தனித்து தான் மட்டும், அவதார காரியத்தை முற்றுமாக நிறைவேற்ற சக்தி குறைந்தவனாக ஆகிவிடுகிறான். இதன் காரணமாகவே, தயாஸ்வருபிணியாய், உலகங்களுக்கெல்லாம் தாயாக இருக்கும் ஜகன் மாதாவையும் தன்னுடன் இணைய அமைத்தே அவதாரம் செய்கிறான். பிராட்டியை விட்டு, பகவான் தான் மட்டும் அவதாரம் செய்தான் என்ற செய்தியே, இதிகாசங்களில் கிடையாது. பிராட்டியை விட்டு பெருமாளை மட்டும் அடைய விரும்பிய சூர்ப்பநகை காதும், மூக்கும் அறுபட்டுத் திரும்பி வந்ததையும், பெருமாளை விட்டுப் பிராட்டியை மட்டும் காமத்தினால் பிடித்ததினால், உயிரையே இழந்த இராவணனின் சரிதமும் மனதில் நினைவு கொள்ள வேண்டியதாகும். பிராட்டியுடன் கூடிய பெருமாளையே பற்ற வேணும் என்று கூறியுள்ளனர் நம் பூர்வாசாரியர்கள்.

திரு. D. கேசவன்-அல்லூர்.

இராமாவதாரத்தில் பிராட்டி, ஜனகமகாராஜனுக்குப்புத்ரியாக, யாக் வேதியில் சீதையாக அவதாரம் செய்தாள். இராமாயணம் என்ற சொல்லை, 'ராமஸ்ய அயனம்' இராமாயணம் இராமனுடைய கதை என்று பொருள் கொள்ளலாம். இந்த இராமாயணம் என்ற சொல்லையே ராமாயா: அயனம் எனப்பிரித்து, இராமாயணம் (இங்கு இராமா என்பது மகாலக்ஷ்மியைக் குறிக்கும்)

# விக்ன தீர்க்கும் விநாயகர்

எந்தக் காரியத்தைச் செய்தாலும் அது விக்னமில்லாமல் நன்றாக நடைபெற விநாயகர் அருள் வேண்டும். அதனால் முதலில் நினைத்துப் பூஜிக்க வேண்டியது அவரைத்தான். மனிதர்களாகட்டும், முனிவர்களாகட்டும் அல்லது தேவர்களாகட்டும் முதல் பூஜை இவருக்குச் செய்துவிட்டுத்தான் எதையும் ஆரம்பிக்கிறார்கள்.

ஒரு சமயம் தேவர்கள் அமிர்தத்தினாலாகிய மோதகத்தை சிவபெருமானிடம் சமர்ப்பித்தனர். அப்போது முருகனும் அங்கிருந்தார். புண்ணியத்தைத் தேடி முதலில் வருபவர்க்கு இந்த மோதகம் என்றார் சிவன். புண்ணிய நதிகளும், மலை காடுகளும் ஈசனிருக்குமிடம் ஆதலால் அவைகளை தரிசித்துப் புண்ணியத்துடன் வர முருகன் மயிலேறிச் சென்றார். ஓங்கார ரூபியான கணபதி, தந்தை, தாயைப் பணிவதை விட வேறு புண்ணியம் ஏது என்று கருதி அவர்களை வலம் வந்து, வழிபட்டு அமிர்தமோதகத்தைப் பெற்றார். தர்ம சூக்ஷுமத்தை உணர்ந்து உலகிற்கு வழி காட்டிய உத்தம விநாயகனை எல்லோரும் எல்லாக் காரியங்களிலும் முதலில் பூஜை செய்து இஷ்ட சித்தி பெற சிவபெருமான் வரமளித்தார். (இதே வரலாறு மாம்பழக் கதையாகவும் கூறப்படுவதுண்டு).

சங்கீதம் கற்க ஆரம்பிக்கும்போது 'லம்போதர' கீர்த்தனையும், கச்சேரிகளில் முதலில் 'வாதாபி கணபதிம்' என்றும், கதாகாலக்ஷேபத்தில் 'ஹிமகிரி தனயா பத்யம்' என்றும், 'திமிகிட திமிகிட' என்றும் ஈசன் ஆணை நிறைவேற்றப்படுகிறது.

ஓம் என்ற பிரணவ வடிவமான விநாயகரை அவர் பரப்ரம்ம ஸ்வரூபியானதால் சகல கர்மாக்களையும் துவக்கும்போது, அவர் பெயரைக் கூறி பூஜை செய்த பிறகே துவக்குகிறார்கள். 'ஓம்' என்று கூறியே வேத பாராயணம் ஆரம்பிக்க வேண்டும். அக்னிஹோத்ரம், இஷ்டி முதலிய கர்மாக்களிலும் "ஓம் முன்னயர" "ஓம் முத்கரா" "ஓம் ப்ரோக்ஷா" என்பதுபோல் முதலில் விக்நேஸ்வர பூஜையை வாக்கினால் செய்கிறார்கள்.

நம் புராண இதிஹாஸ கிரந்தங்களின் ஆரம்பத்தில் "ஓம் மஹா கணபதயே நம:" என்றே கூறப்பட்டுள்ளது. துர்வாஸ ஸ்தவத்திலும் சாக்த சமயங்களிலும் கணபதி வார்த்தைக்கு முன்பு "வல்லபாஸ்லிஷ்ட" என்ற சொல்லும் சேர்ந்து தியானம் செய்யப்படுகிறது. ஆகையால் எல்லோராலும் முதலில் பூஜிக்கப்படும் விநாயகரை நாமும் முதலில் பூஜித்து வணங்குவோம்.

# விநாயக ஹாஸ்ய சுலோகம்

'ஸமாஸ குஸுமாவளி' என்ற இலக்கண சம்பந்தமான நூலை எழுதிய சர்வமங்கள சாஸ்திரி, விநாயகரைப் பரிகசித்துப் பாடிய ஹாஸ்ய சுலோகமிது.

பூநாயகம்வா தன நாயகம்வா
பஜன் புவம் வா தனமேதி லோகே|
தத் விக்ன நாதம் ந பஜாமி கிம்து
ஸஹஸ்ர சஸ்தம் பிரணமாமி நித்யம்||

பூமியின் தலைவர்களை அண்டினால் பூமியைக் கொடுப்பார்கள். செல்வத்தின் தலைவர்களை அண்டினால் பணம் கிடைக்கும். நான் விக்ன விநாயகனை அண்டமாட்டேன். (விக்ன நாயகன் விக்னத்தைத் தானே கொடுப்பான்). என் பக்கத்தில் வராதே என்று அனுதினமும் அவனை ஆயிரம் முறை நமஸ்கரிப்பேன் என்பது மேற்படி சுலோகத்தின் பொருள்.

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி ஸ்வாமி - திருப்பதி

பிராட்டியின் கதை எனவும் பொருள் கொள்ளலாம் என்று பெரியோர்கள் கூறியுள்ளனர். இக்கருத்தையே வால்மீகி மகரிஷியும், 'காவ்யம் இராமாயணம் க்ருத்ஸனம் சீதாயாஸ் சரிதம் மஹத்' என்று கூறியுள்ளதையும் நினைவில் கொள்ள வேண்டியது.

இனி, தலைப்பில் கொடுத்துள்ள விஷயத்தை ஒப்பு நோக்கலாம்.

**ஸ்ரீமத்ராமாயணம்**

ஸ்ரீமத் ராமாயணம், நாரத மகரிஷியின் உபதேசத்தின்படியும் ப்ரும்மாவின் அனுக்ரஹத்தாலும், சரஸ்வதியின் கடாக்ஷத்தாலும், ஸ்ரீ வால்மீகி மகரிஷியால் இயற்றப்பட்டது.

இராமனும் அவர் முன்னோர்களும் சூரிய வம்சத்தை சேர்ந்தவர்கள்.

சூரிய வம்ச அரசர்களுக்கு குல குரு வசிஷ்ட மகரிஷியாவார்.

பொதுவாக சூரிய வம்சத்து மன்னர்களெல்லாம், மக்கட் செல்வத்திற்காக தவம், யாகம் முதலியவைகளைச் செய்தே பெற்றனர்.

இராமாவதாரம் தேஹ சம்பந்தம் இல்லாமல் அவதாரம். அதாவது ஔரச புத்ரன் (சுக்ல சுரோணித சேர்க்கையால்) என்று கூற முடியாது.

இராமாவதாரம் அரண்மனையில், 'அபிஜித்' என்ற முகூர்த்தமாகிய நடுப்பகலில் ஜனனம்.

ஸ்ரீராமனும் தன் குலகுருவாகிய வசிஷ்டரிடமிருந்தே கல்வியையும், விஸ்வாமித்திரரிடமிருந்து சகல அஸ்திர பயிற்சியையும், பிரயோகங்களையும் கற்றுக் கொண்டார். இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது யாதெனில், யாராக இருந்தாலும், வித்தைகளை குரு மூலமாகத்தான் கற்றுக் கொள்ள வேணும் என்ற நியதியை ஒட்டியும் எடுத்துக் காட்டாக இருக்க வேணும் என்பதற்காகவும், வசிஷ்டரிடமிருந்தும், விஸ்வாமித்திரரிடமிருந்தும் கற்றுக் கொண்டார்.

பகவான் சாதாரண மனிதனாக அவதாரம் செய்து, மனிதர்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்து நடக்க வேண்டிய தர்மங்களை தான் நடத்திக் காண்பித்தபடியால் இராமாவதாரம் பூர்ணாவதாரமாகும்.

ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீ ராமன், தான் பகவான் என்று கூற வில்லை. தவிர இராமனே தன்னை, 'அஹம் தசராத்மஜம், ஆத்மானம் மானுஷம் மன்யே' என்றே கூறியுள்ளார். அதாவது தான் தசரதருடைய புத்திரன்என்றும், தன்னைச்சாதாரண மனிதனாகத்தான் நினைக்கிறேன் என்பதாகும்.

இராமாயணத்தில் இராமன் அநேகமாக அமானுஷ்யமான (அதாவது சாதாரண மனிதர்களால் செய்ய முடியாத) செயல்களைச் செய்து காட்டவில்லை.

இராமாயணத்தில் அரசர்கள் எவ்வாறு நாட்டை ஆட்சி செய்ய வேண்டும், அரசர்களுடைய நீதி, தர்மம், அரசன் மக்களுடன் எவ்வாறு நடந்து கொள்ள வேணும், தவிர மாதா பிதாக்களிடம் உள்ள பக்தி, "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்ற முதுமொழிக்கிணங்க தந்தை சொல்படி நடப்பது போன்றவைகளையும், தவிர நண்பர்களிடமும், குருவினிடமும் எவ்வாறு நடந்துகொள்ள வேணும் என்பதையும் இராமன் தானே நடத்திக் காட்டினான்.

இராமாவதாரத்தில், ஸ்ரீ ராமன் 'ஏகபத்னிவிரதன்'. அதாவது 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற கொள்கையைக் கடைப்பிடித்துக் காண்பித்தான். தான் இப்பிறவியில் 'தன் மனைவியைத் தவிர மற்ற எந்த ஸ்திரியையும் சிந்தையிலும் தொடேன்' என்று சூளுரைத்து அதன்படி நடந்தான். 'ந ராம: பர தாரான் வைச க்ஷுர்ப்யாம்பி பஸ்யதி' என்பதுவால்மீகியின்வாக்கு.

ஸ்ரீமத் ராமாயணம் மனிதனாகப் பிறந்தவர்கள் செய்ய வேண்டிய கடமைகள், தவிர குடும்ப வாழ்க்கை நடத்திக் கொண்டே தர்மங்களை செய்தும், கடைப்பிடித்தும், அதன்படி வாழ்ந்தும் பகவானை அடையலாம் என்ற வழியைத் தெரிவிக்கிறபடியால் இராமாயணத்தைப் ப்ரவர்த்தி மார்க்கம் என்று கூறுவதுண்டு.

தவிர இராமாயணத்தில் அநேக சரணாகதிகள் உள்ளன. இந்த சரணாகதிகள் தேவர்கள், மனிதர்கள், பக்ஷி, விலங்குகள், அரக்கர் உட்பட பலவகைப்பட்டோரும் சரணாகதி செய்து பயன் பெற்றிருக்கின்றபடியால் இதற்கு சரணாகதி சாஸ்திரம் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

இராமாயணத்தில் 'இராமன் செய்தது போல் செய்,' என்பது பழமொழியாகும். 'ராமவத் வர்த்திதவ்யம் ஸ; தர்ம.'

ஸ்ரீ ராமன் மேலோர், கீழோர், மானிடர், பக்ஷி, விலங்கு என்று

## விநாயகருக்கு மூஷிக வாஹனம்

கிருதயுகத்தில் சிங்கம், திரேதா யுகத்தில் மயில், துவாபர யுகத்தில் மூஞ்சுறு, கலியில் குதிரை வாகனனாகவும் திருக்கோலம் கொண்டுள்ள கணபதியைச் சென்னை தியாகராய நகர் அகஸ்தியர் ஆஸ்ரம விநாயக மண்டபத்தூணில் தரிசிக்கலாம்.

இவ்வளவு பெரிய ஆகிருதி உள்ளவருக்கு இவ்வளவு சிறிதான மூஞ்சுறு வாகனமா? (அவ்வளவு லேசாகவும் உள்ளவர் இவர் என்பது கருத்து) என்று வியக்காதவர்களே கிடையாது எனலாம்.

கணபதியைக் காட்டிலும் சரீரத்தில் பருமனான சுவாமி வேறு ஒருவர் இல்லை. யானையின்தலை, பெரிய உடல் கொண்டஅவருக்கு ஸ்தூல காயர் என்று பெயர். அவர் ஒரு குழந்தை. குழந்தை தொந்தியும் தொப்பையுமாயிருந்தால் பார்க்க அழகாக இருக்கும். குழந்தைகள் நல்ல புஷ்டியுடன் இருக்க வேண்டும் என்பதையே இந்தக் குழந்தை ஸ்வாமி உணர்த்துகிறார்.

இவரே யானை மாதிரி இருக்கிறார். அதற்கு நேர் விரோதமான சின்னஞ்சிறு ஆகிருதி உடையது மூஞ்சுறு. இதை அவர் தன் வாகனமாக வைத்துக் கொண்டிருக்கிறார். மற்ற சுவாமிகளுக்காவது ஒரு மாடு, ஒரு குதிரை, ஒரு பட்சி என்று வாகனம் இருக்கிறது. இவரோ தாம் எத்தனைக்கு எத்தனை பெரிய ஸ்வாமியாக இருக்கிறாரோ அத்தனைக்கு அத்தனை சின்ன வாகனமாக வைத்துக் கொண்டிருக்கிறார். சுவாமி எதை வாகனமாக வைத்துக் கொண்டாலும், வாகனத்தினால் சுவாமிக்கு கௌரவம் இல்லை. சுவாமியால்தான் வாகனத்திற்குக் கௌரவம். ஆகையால் தன்னுடைய வாகனத்திற்கு கௌரவம் கொடுக்க, அதனுடைய சக்திக்கு ஏற்றபடி நெட்டிப் பிள்ளையார் மாதிரியாகக் கனம் இல்லாமல் இருக்கிறார் விநாயகர். அதற்குச் சிரமம் இல்லாமல், ஆனால் அதற்கு மரியாதை கௌரவம் எல்லாம் உண்டாகும்படியாகத் தன் உடம்பை வைத்துக் கொண்டிருக்கிறார். ஸ்கந்த புராணத்தில் இவருக்கு எலி வாகனம் ஏற்பட்ட வரலாறு பின் வருமாறு காணப்படுகிறது.

மஹரிஷி சௌபரியின் மனைவி தன் ஆசிரமத்தில் தனியாக இருந்தாள். அப்போது கிரௌஞ்சன் என்ற அசுரன் அவளிடம் தவறாக நடக்க எண்ணினான். ரிஷியின் மனைவி கூச்சலிட்டாள். அதைக் கேட்டு ஓடி வந்தார் முனிவர். அந்த அசுரனை எலியாகப் போகும்படிச் சபித்தார். அசுரன் தவறை உணர்ந்து மன்னிப்புக் கேட்டான். பிள்ளையார் அருளால் சாபவிமோசனம் ஆகும் என்று அந்த ரிஷி கூறினார். இந்த எலியின் உபத்திரவம் தாங்க முடியாமல் போனதில் முடிவில் பிள்ளையாரே வந்து இதை அடக்கித் தன் வாகனமாக்கிக் கொண்டார். என்னே விநாயகரின் கருணை.

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி சுவாமி, திருப்பதி.

## உத்ஸவங்கள்

புரட்டாசி மாதம் மிரும்மோத்ஸவம் காண இரு கண்கள் போதாது. ஐந்தாம் நாள் காலை மோஹினி அவதாரம் உத்ஸவம். அன்று மாலை கருடசேவை.

இந்த பிரும்மோத்ஸவம் நீண்டகாலமாகவே திருமலையில் நடைபெற்று வருவதாகத் தெரிகிறது. கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் ஒரு அரசிளங்குமரி பிரும்மோத்ஸவத்தை முன்னிட்டு பொன்னும் நகைகளும் காணிக்கையளித்ததாகவும் பஞ்சலோகத்தில் ஒருபுது வேங்கடேச விக்ரஹம் செய்து வைத்ததாகவும் தெரிகிறது. பிற்காலத்திலும் பீரும்மோத்ஸவம் நடைபெற பொன்னும் நிலபுலன்களும் அடிக்கடி பலரால் அளிக்கப்பட்டதாகக் கல்வெட்டுகளிலிருந்து தெரியவருகிறது.

மூலவரின் மகரகண்டி, லட்சுமி ஹாரங்களை அணிந்து கொண்டு (இந்த இரண்டு விசேஷ நகைகளும் கர்பக்கிரகத்திலிருந்து வெளிவருவது இச்சமயத்தில்தான்) கருடவாகனத்தில் காட்சி தரும் வேங்கடவனைக் காண ஜன சமுத்திரம் அலைமோதும். எத்தனை மணி நேரம் எவ்வளவு பொறுமையாக பக்தர்கள் இரவில் இத்தரிசனத்திற்குக் காத்திருக்கிறார்கள் தெரியுமா?

வேங்கடேசப் பெருமாளுக்கு அழகிய ரத்னக்கிரீடம், அபயஹஸ்தம், தொடையிலுள்ள ஹஸ்தம் இவைகள் வைரத்தினால் செய்து சமர்ப்பித்திருக்கிறார்கள். இந்த அழகிய ஆபரணங்கள் வேங்கடேசப் பெருமாளின் திவ்ய சோபையை எடுத்துக் காட்டுவது போல அழகிய வெள்ளித் தேரையும் தேவஸ்தான அதிகாரிகள் செய்து வைத்திருக்கிறார்கள்.

நன்றி,

வேற்றுமை பாராட்டாமல், எல்லோரிடமும் சுமுகமாகவும், எளிமையாகவும் பழகி நட்புக்கு இலக்கணமாக வாழ்ந்து காட்டினார்.

இராமாவதாரத்தில் முதன் முதலில் வதம் செய்யப்பட்டது தாடகை என்ற அரக்க ஸ்திரியாகும்.

ஸ்ரீராமன் வனவாசத்தின் பொருட்டு, தண்ட காரண்யத்தில் வசித்து வந்தபோது, தண்டகாரண்ய வாசிகளான முனிவர்கள், இராமனுடைய திருமேனியழகில் மயங்கி மோகங் கொண்டிருந்தனர். தவிர தாங்கள் சீதையைப் போல் ஸ்திரியாக பிறக்கவில்லையே, ஸ்திரியாக பிறந்து இருந்தால், இராமனை அடைந்து ஆலிங்கனம் செய்து கொள்ளலாமே என்ற எண்ணத்துடன் ஏங்கியிருந்தனர்.

இராமாவதாரத்தில் வாலி, சுக்ரீவன் ஆகிய இருவருடைய உருவ ஒற்றுமையினாலும், தன் நண்பனுக்கு விரோதியானவன் தனக்கும் விரோதியே என்றும், ஒருக்கால் வாலியே சரணமடைந்து விட்டால், இராவண, கும்பகர்ணர்களுடைய வதமும், அவதார காரணமும் பூர்த்தியடையாது என்ற காரணத்தினாலும், இராமன் வாலியை மறைந்து இருந்தே கொல்ல வேண்டியதாயிற்று.

இராமாயணத்தில் ஆதிசேஷனின் அவதாரமான இலக்குவன், இராமருக்கு தம்பியாக அவதரித்து, இராமருக்கு கைங்கர்யங்களையே செய்து வந்தார். 'இலக்ஷ்மணோ லக்ஷ்மீ சம்பந்ந:' என்பது வால்மீகியின் வாக்கு. இங்கு 'லக்ஷ்மீ சம்பந்ந:' என்பது கைங்கர்ய லக்ஷ்மீயைக் குறிக்கும்.

இராமவதாரத்தில் சிறிய திருவடியாக அனுமன் இராமனுக்குத் தாஸனாய் (சேவகனாய்) சேவை செய்தார். தவிர இராம இலக்குவர்களுக்கு வாகனமாகத் தன் இருதோள்களிலும் அவர்களைச் சுமந்து யுத்தம் செய்வதற்கு மிகவும் உதவியாக இருந்தார்.

இராமாயணத்தில் சீதை என்கிற ஜீவாத்மா இலங்கையில் இருந்தது. அந்த ஜீவாத்மாவை, இக்கரையில் இருக்கும் பரமாத்மாவுடன் சேர்த்து வைப்பதற்கு வாழ்க்கை என்னும் கடலைத் தாண்டி ஜீவாத்மாவை, பரமாத்மாவுடன் சேர்த்து வைப்பதற்கு அனுமன் ஆசார்யனாகவும் இருந்தார்.

இராமவதாரத்தில் ஒரு ஸ்திரியின் (சீதை) காரணமாகவே இராவணனுடன் யுத்தம் செய்து வதம் செய்தார்.

இராமாயணத்தில் இராமன் மக்களுக்குப் பெரும்பாலும் உபதேச வார்த்தைகளாக எதையும் சொல்லவில்லை.

இராமன், இராவணனுடன் போர் புரிவதை நேரில் பார்த்தவர் ஜாம்பவான். இராமனுடைய புஜபல பராக்ரமத்தையும், யுத்தம் செய்யும் திறமையையும், கண்ட ஜாம்பவானுக்கு, தானும் ஒருமுறை இராமனுடன் யுத்தம் செய்ய வேண்டும் என்ற அவா ஏற்பட்டது.

இராமாயணத்தில் இராமரை வியாஜமாகக் கொண்டு லோகக்ஷேமார்த்தமாக, அகஸ்திய பகவானால், 'ஆதித்ய ஹிருதயம்' என்ற ஸ்தோத்திரம் இராமனுக்கு யுத்த களத்தில் உபதேசிக்கப்பட்டது.

ஸ்ரீமத் ராமாயணத்தில் சபரி என்ற வேடுவ வயோதிக ஸ்திரி, இராமன் வருகையை எதிர்பார்த்து இருந்து, இராமன் வந்தவுடன், அவன் திருவடிகளில் வணங்கி,

(29-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ கிருஷ்ணவதாரத்தின் சிறப்பு

திரு. பி. ரவீந்திரன், பி.ஏ. - திப்பிராஜபுரம்.



சந்திர வம்சத்தில் சந்திரனுக்குப் பிள்ளையாக புதன் பிறந்தான். புதனது மகன் புரூரவஸ். புரூரவசுவுக்கு பின் ஆயுவின் புதல்வனாக நகுஷன் பிறந்தான். நகுஷனது மகனான யயாதிக்கும் சுக்ராசாரியரின் பெண்ணான தேவயானிக்கும் புத்திரனாக "யது" பிறந்தான். இவனது சந்ததிகள் யது வம்சத்தவர்கள் என்றும், யாதவர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். யதுவுக்குப்பிறகு 14வது தலைமுறையாக வ்ருஷ்ண என்ற அரசன் அரசாட்சி செய்தான். இதனால் இவர்கள் "வ்ருஷ்ணி குலம்" எனக் கூறப்பட்டனர். வ்ருஷ்ணியின் மகன் மது. மதுவின் மைந்தன் இரண்டாவது வ்ருஷ்ணி ஆவான். இந்த இரண்டாவது வ்ருஷ்ணி என்ற மன்னனுக்கு குகுரன், பாஜமானன் என இரு புதல்வர்கள் பிறந்தனர். குகுரனுக்குப் பிறகு ஆறு தலைமுறை கழித்து சந்திர வம்சத்தில் முப்பதாவது அரசனாக உக்ரசேன மஹாராஜா தோன்றினார். இந்த உக்கிரசேனருக்குப் பிறந்தவனே கம்ஸன். உக்ரசேனருக்கு தேவகன் என்ற ஒரு சகோதரன் உண்டு. இவனது மகளே கண்ணனைப்பெற்று எடுத்தத் தாயான தேவகி ஆவாள்.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள குகுரன், பாஜமானன் என்ற இரு அரசர்களுள் பாஜமானனுக்குப் பின் எட்டு அரசர்கள் முறையே அரசாண்டனர். ஒன்பதாவதாக சூரசேனன் என்பவர் பிறந்தார். இவருக்கு மாரிஷை என்ற மனைவியிடம் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு தகப்பனாராகிய வசுதேவர் பிறந்தார். இவர் தேவகியை மணம் செய்து கொண்டு ஸ்ரீ பகவானை மகனாகப் பெற்றாள். கண்ணனின் சகோதரியான சுபத்தரையும் தேவகியிடம் வசுதேவருக்குப் பிறந்தவள் ஆவாள்.

வசுதேவருக்கும் தேவகிக்கும் மகனாக ஸ்ரீ கிருஷ்ணன் திருவவதாரம் செய்தபோது நடுநிசி நேரம். எங்கும் பூமியானது குளிர்ந்திருந்தது. மூன்று உலகத்திலும் உள்ள சாதுக்கள் ஆனந்தமடைந்தனர். இதனை ஸ்ரீமத் நாராயணீயத்தில் பட்டத்திரி "க்லேசாபகஹத்ரிஜகதாம் த்வமிஹாவிராஸி" என்று குறிப்பிடுகிறார். இதனைப் பெரியாழ்வார்,

"வண்ண மாடங்கள் சூழ்திருக்
கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்
தினில்
எண்ணெய் சுண்ணம் எதிர் எதிர்
தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்தளரு
யிற்றே"

என்கிறார். அதாவது கண்ணன் பிறந்ததும்எண்ணெய், வண்ண நிறப்பொடிகள் முதலியவற்றை வாரி இறைத்து மகிழ்ந்தனர் என்பதாகும். மேலும் குழந்தைக்கண்ணனைஎண்ணிஎண்ணிப் பெரியாழ்வார் மொழிந்த பாசுரங்கள் உள்ளத்தை உருக்குபவையாகும். சிறிய உதடுகளால் கொடுக்கப்பட்ட அச்சுதனின் "முத்தம் இருந்தவா காணீரே" என்றும் 'வாக்கும், நயனமும், வாயும் முறுவலும், மூக்கும் வந்து காணீரே' என்றும், கிருஷ்ணனின் குழந்தை வடிவ அழகில் மயங்குகிறார். தவிர கண்ணனுக்குத் தாயாக தன்னை பாவித்துக்கொண்டு 'கண்ணா! உன் இடைக்கு சலங்கை சிவபிரானும், காற் சிலம்புகளை தேவர்களும் கொடுத்துள்ளனர். மற்றும் பலவித அணிகளும் வந்துள்ளன. எனவே அழாதே' என்று அமைதிப்படுத்துகிறார். ஒரு சமயம் தோழியிடம் யசோதை,

"கிடக்கில் தொட்டில்.கிழிய உதைத்திடும்
எடுத்துக் கொள்ளில் மருங்கை
இறுத்திடும்
ஒடுக்கி புல்கில் உதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கு இலாமையால் நான் மெலிந்
தேன் நங்காய்".

(பெரியாழ்வார்)

என்று கூறுகிறாள். அதாவது 'பெண்ணே! கிடக்கும்போது தொட்டில் துணி கிழிய உதைக்கிறான். எடுத்துக் கொண்டால் இடுப்பை ஒடிக்கிறான். அணைத்துக் கட்டிக் கொண்டால் வயிற்றில் பாய்கிறான். இவனால் என் வலிமை எல்லாம் குன்றி விடுகிறது' என்கிறாள் யசோதை. 'பிறகு கருடன் மீதேறி வந்து கஜேந்திரனுக்கு முதலையினால் ஏற்பட்ட பயத்தினைப்போக்கிய கண்ணபிரானே

என்னை அப்பூச்சி காட்டி அச்சுறுத்து கிறுனே நான் என்ன செய்வேன்' என்கிறுர்.

நாராயண பட்டத்திரியும் நாராய ணீயத்தில் 'குருவாயூரப்பா! தாங்கள் வாமனுவதாரத்தில் மூவடி மண் கேட்டு மஹாபலியிடம் யாசித்த பிறகு இனி இவ்விதம் பிறரை இரந்து வாழும் பிழைப்பே வேண்டாம் என்று முடிவு செய்து அழகிய திருட்டில் ஈடுபட்டு, வெண்ணை தயிர் முதலிய வற்றை எடுத்து உண்டு களித்தீரோ' என்று கேட்கிருர்.

"மம கலு பலி கேஹே யாசனம்
ஜாதமாஸ்தா
மிஹ புனரபலானும் அக்ரதோ
நைவகுர்வே
இதி விஹிதமதி: கிம் தேவ ஸந்த்
யஜ்ய யாச்ஞம்
ததிக்ருத மஹரஸ்தவம் சாருஞ
சோரணேன"

என்பது பாடல் லீலாசுகரும் பகவானை பாலகிருஷ்ணனுகவே அடிக்கடி தியா னிக்கிறுர். கண்ணனே பரமாத்மா என்றும் அவரது பதினுராயிரம் மனைவிகளும் அப்சரஸ் எனப்படும் தேவ கன்னிகையர் என்றும், த்ரௌ பதி சசிதேவியின் அம்சம் என்றும், குந்தி, மாத்ரி எனப்படும் பாண்டவர் களது தாயார் இருவரும் ஸித்தி, த்ருதி எனப்படும் தேவதைகளின் அம்சம் எனவும் மஹாபாரதம், ஆதி பர்வம் ஸம்பவபர்வாத்யாயம் 67வது அத்யாயத்தில் உள்ளது.

ஸ்ரீ கிருஷ்ண அவதாரத்தில் பக வான் தர்மத்தைக் காப்பதற்காக சில சமயம் யுக்தியான முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டி வந்தது. ஆயி னும் தன் எதிரியை வதம் செய்யும் போது கூட இறுதிவரை தர்மத்தைக் கடைப்பிடித்தும், கருணை காட்டியும் வந்துள்ளார். இதற்குச் சில சான்று களைக் கூறலாம். உதாரணமாக தானே திருமால் என்றுக்கூறிக்கொண்டு கண் ணனை நிந்தனை செய்து கொண்டு அந் நாளில் பௌண்டிரக வாசுதேவன் என்ற அரசன் வாழ்ந்தான். பௌண் டிரக ஜாதி என ஒரு பிரிவு அப்போது இருந்ததாக பிறதேச வரலாறுகள் கூறுகின்றன. இவர்களைப்பற்றி தச குமார சரித்திரமும் ஹரிவம்சமும் குறிப்பிடுகின்றன. சீனதேச யாத் ரீகர்களது குறிப்பிலும் இப்பிரிவின ரைப்பற்றிஎழுதப்பட்டுள்ளது.ஸ்ரீமத் ராமாயணம் இந்த பௌண்டிரகர்களை "தாக்ஷிணுத்யர்கள்" என அழைக் கிறது. மஹாபாரதம் இவர்களைத் தற் காலத்திய மேற்கு வங்காளத்தைச் சேர்ந்த மக்கள் என்று தெரிவிக் கிறது. பாரதப் போரில் இவர் கள் துரியோதனுதியர் சார்பில் கலந்துகொண்டதாகக் கூறுகிறது. எனவே, புராணங்கள் என்பன வர லாற்றுச் சிறப்புடையன என்பதும் வெறும் பழம் கதையல்ல என்பதும், நாம் முதற்கண் உணர வேண்டும். எனவே மேற் குறிப்பிட்ட பௌண்டி ரக ஜாதியில் பிறந்த வாசுதேவன் என்ற அரசனை ஸ்ரீ கிருஷ்ணன் வலு வில் பகை கொள்ளவில்லை. அவனு கவே போருக்கழைத்த போதும் சமா தானப் போக்கைக்கடைப்பிடித்தார். பிறகும் சரணடைய வாய்ப்பு அளித் தார்.இறுதியில்தனிஒருவனுகஅவனைப் போரில் சக்ராயுதத்தால் வதம்செய் தார். ப்ருஹத்ரதன் மகனும் சண்ட கௌசிக முனிவரிடம் வரம் பெற்ற வனுமான ஜராசந்தனது வதமும் கண் ணனது துணையுடன் பகலில் மக்களது முன்புதான் நடைபெற்றது.

ராஜசூய யாகத்தில் சிசுபால வதத் திலும் கண்ணன் பொறுமையையே கடைப்பிடித்தார். இதில் யாகத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு கண்ண னுடையதாக நியமிக்கப்பட்டு இருந் தது. இதனுல் கண்ணனின் பெய ருக்கு அபகீர்த்தி ஏற்படுத்த எண்ணிய சிசுபாலன் முதலிய அரசர்கள் யாகத் தைக் கெடுக்க நிச்சயித்தனர். ஸுனீ தன் கருஷகன் முதலிய வீரர்களுடன் கூடி சிசுபாலன் கண்ணனைப் பல வாறும் நிந்தித்தான். பீஷ்மர் கண்ணனுக்குப் பரிந்து பேசினுர். உடனே சிசுபாலன் பீஷ்மரைப் பிறரை அண்டி வாழ்பவர் என்றும் தங்களையே நம்பிப் பிழைப்பவனை வதம் செய்யக் கூடாது என்று தாம் மன்னித்து விடுவதாகவும் கூறினுன். பீஷ்மர் உடனே மறு மொழியாக 'உங்களை நாம் துரும்புக்குச் சமானமாக கருது கிறோம்' என்றுர்.

இதைக் கேட்ட சிசுபாலனின் நண் பர்கள் பீஷ்மரை எரிகின்ற தீயில் தள்ளுங்கள் என்றும், மாட்டை அடிப்பது போல அடித்துக் கொல் லுங்கள் என்றும் கூவினுர்கள். பீஷ் மர் அவ்வரக்கர் கூட்டத்தை நோக்கி நீங்கள் 'எதை வேண்டுமானுலும் செய்து பாருங்கள். தாங்கள் என்னை நோக்கி ஓர் அடி எடுத்து வைக்கும் முன்பே நான் உங்களது தலைமீது காலை வைத்து மிதித்து விடுவேன்' என்றுர்.

பீஷ்மர் ஸ்ரீகிருஷ்ணனை சிறுபிரா யத்திலேயே தாம்சோதித்துப்பார்த்து இருப்பதாகவும்அவர் ஒரே காலத்தில் கணக்கிலடங்கா அரக்கர்களை வெல் லக்கூடியவர் என்றும், ஸ்ரீகிருஷ்ணனை வெல்லத்தக்க பலசாலி இன்னும் பிறக்கவில்லை என்றும், மேலும் கல்வி, கொடை, இரக்கம், அடக்கம், தைரி யம், கீர்த்தி, செல்வம், ஞானம், இவற்றினுல் சிறந்து விளங்கும் கண்ணனை நிந்திக்க துணிபவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் உயி ரின் மீது ஆசையின்றி இருந்தால் இதோ எதிரிலேயே கலக்கம் இன்றி நிற்கும் பேரழகனை யுத்தத்திற்கு அழைத்துப் பார்க்கலாமே என்றும் அறைகூவினுர் பீஷ்மர்.

சிசுபாலனும் மற்ற அரசர்களும் கண்ணன் மீது பலவித ஆயுதங்களை எறிந்து கொண்டு போருக்கு அழைத் தனர். கண்ணன் அமைதியாக சிசு பாலனை நோக்கி, 'நாம் இதுவரை உனது பலவித குற்றங்களையும் பொறுத்து இருந்தோம். நாம் நரகா சுரனுடன் போருக்குச்சென்றபோதும் எனது தேசத்தை நீ தீக்கிரையாக்கி

அழிக்க முயற்சித்தும், என் தந்தை செய்த அசுவமேத யாகத்தை அழிக்க முயன்றதையும் கூட நாம் மன்னித்து அருளினோம். இனி உன்னை மன்னிப்பதற்கில்லை' என்றார். உடனே சினத்தின் வசப்பட்ட சிசுபாலனும் அவனது நண்பர்களும் பலவித ஆயுதங்களால் கண்ணனைத் தாக்கினார்கள். ஸ்ரீகிருஷ்ணன் யாகசாலையிலிருந்து அப்பால் அவ்வரசர்களை இழுத்துச் சென்று ஒளிவீசுகின்ற சக்ராயுதத்தை ஏவினார். அது எதிர்த்து வந்த எல்லா ஆயுதங்களையும் பொடி செய்து கண நேரத்தில் சிசுபாலனது சிரத்தை கொய்து எறிந்தது. மற்ற அரசர்கள் அற்ப பிராணிகளைப்போல் ஓட்டம் பிடித்தனர். பிறகு ராஜசூய யாகம் இனிதுநடைபெற்றது. பிறகுஸ்ரீகிருஷ்ணனே அக்ர பூஜைக்கும் உரியவரானார்.

கண்ணனை அறியாமையால் மக்களில் சிலர் குறைவாகப் பேசுகின்றார்கள். ஆனால் கண்ணன் எதையும் அறத்திற்கு விரோதமாக செய்ததே இல்லை. தர்மத்தை ஸ்தாபிக்க ராஜ தந்திரத்தை கையாண்டார். பாண்டவருக்காக தூது சென்றபோது பகவான் கார்த்திகை மாதம் ரேவதி நட்சத்திரம் கூடிய சமத்ர முகூர்த்தத்தில் சூரியன், அக்னி, வேத விற்பன்னர்களைப் பூசித்து வ்ருஷபத்தின் வாலை தரிசனம் செய்து திவ்யாலங்கார பூஷிதனாகக் கிளம்பினார். தாருகன் என்ற கண்ணனின் சாரதி ரதத்தைச் செலுத்தினான். துர்யோதனின் தந்தை த்ருதராஷ்டிரன் கண்ணனை வரவேற்கப் பலவித ஏற்பாடுகளைச் செய்திருந்தான். இதனால் கண்ணனைப் பாரதப்போரில் தன்வசப்படுத்திக் கொள்ள எண்ணினார் துரியோதனின் தந்தை. ஆனால் துரியோதனன் கண்ணனைப் போரில் கலந்து கொள்ளாது கட்டிப்போட்டு சிறைப்படுத்தத் திட்டமிட்டான்.

கிருஷ்ணனின் உறவினரும் சீடனும் ஆகிய சாத்தியகி இத்திட்டத்தை அறிந்து ரகசியமாக யாதவ வீரர்களால் அரண்மனையை முற்றுகையிட்டான். கண்ணனிடமும் இவ்விபரத்தை தெரிவித்தான். கண்ணன் சாத்யகிக்கு அனுமதி அளித்துவிட்டு தூது செல்ல புறப்பட்டார். வழியில் பல முனிவர்களைக் கண்டு வணங்கினார். பரசுராமரைச் சந்தித்து வணங்கித் தழுவி விடைபெற்றார். பிறகு அஸ்தினாபுரியை அடைந்து வரவேற்பை ஏற்றுக் கொண்டார். வந்த காரியம் முடியும் முன்பு விருந்துண்ணக் கூடாது என துரியோதனிடம் மறுத்துப் பேசிவிட்டு விதுரன் வீடு சென்று தங்கினார். பிறகு மறுநாள் சபா மண்டபம் சென்றார். துரியோதனன், சகுனி, கர்ணன் முதலியவர்கள் கண்ணனை ஏளனமாகப் பேசி வஞ்சனையாக சிறைப்படுத்தவும் முயற்சித்தனர்.

ஆனால் பகவான் தனது தெய்வீக சக்தியை அவையோருக்கு உணர்த்தினார். தாமே தனி ஒருவனாக அனைவரையும் அழிக்க முடியும் என்றும் நிரூபித்தார். சாத்யகியின் ஏற்பாடுகளையும் சபையோருக்கு விளக்கினார். பிறகு த்ருதராஷ்டிரன், மகன் சார்பாக மன்னிப்பு கோரினான். பீஷ்மர் அக்கயவர் கூட்டத்தை வன்மையாகக் கண்டித்தார். துரோணர் முதலிய பெரியோர்கள் கிருஷ்ணனிடம் துரியோதனின் செயல்கள் காற்றைப் பிடிப்பதுபோலும், குழந்தை சந்திரனைப் பிடிப்பதுபோலும் உள்ளது என்றும் கூறிச் சமாதானப்படுத்தினார்கள். பிறகு கண்ணன் தர்மத்தை பலவாறும் எடுத்துரைத்தும் போர் நடப்பது என்பது உறுதியானது. போரில் துரியோதனனுக்குத் தனது "அற்புத நாராயணம்" என்ற படையை உதவிக்கும் அளித்தார். போரில் ஆயுதம் ஏற்காது. பார்த்தனுக்குச் சாரதியானார். இவ்விதம் பாரபக்ஷம் இல்லாது நடந்த ஸ்ரீ கிருஷ்ணன் நமக்கு ஒரு வழிகாட்டியாக தர்ம ஸ்தாபகராக இருந்துள்ளார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இத்தகைய சிறப்பு வாய்ந்த காயாம்பூ வண்ணனும், பீதாம்பரம் அணிந்தவனும் அடியார்களைத் தளர விடாதவனுமான கோவிந்தனை வணங்குபவருக்கு எங்கும் எப்போதும் பயம் இல்லை என்கிறார் வியாசர்.

"அதஸீ புஷ்ப ஸங்காசம் பீதவாஸ
ஸமச்யுதம்
யே நமஸ்யந்தி கோவிந்தம்
நதேஷாம் வித்யதே பயம்"

என்று மகாபாரதம் கூறுகிறது.

ஸ்ரீ கிருஷ்ணன் குருவாயூரில் இன்றும் எழுந்தருளிப் பக்தர்களைக்காத்தருளுகிறார். இத்தலத்தில் நாராயண பட்டத்ரி என்ற கவிஞர் பாகவதத்தின் சுருக்கமாக ஒரு காவியத்தை இயற்றியுள்ளார். இதில் இவர் கிருஷ்ண லீலைகளை கூறும்போது தயிர்ச் சட்டிகளை மத்தினால் கண்ணன் உடைத்தார் என்று எழுதுகிறார். ஆனால் பாகவதத்தில் குழவியினால் உடைத்தார் என்று உள்ளதால் பட்டத்ரி தாம் மாற்றி எழுதியதற்காக மனம் குழம்பினார். உடனே குருவாயூரப்பன் பட்டத்ரியிடம் 'அப்பனே நான் தயிர் சட்டிகளைக்குழவியினாலும் உடைத்தது உண்டு. மத்தினாலும் உடைத்ததுண்டு. கவலை வேண்டாம்' என்று பதிலளித்தார். இதுபோல பட்டத்ரி உத்தர ராமசரித சுலோகத்தில் 'குருவாயூரப்பா! நீ இப்படி கர்ப்பிணியாகிய சீதாதேவியை வனத்திற்கு அனுப்பியது நியாயமா' என்று கேட்கவே பகவான் புன்சிரிப்புடன் 'அவ்விதம் செய்தது ராமனல்லவா. நான் எந்த ஒரு பெண்ணையாவது கைவிட்டதாக வரலாறு உண்டா? என்னை ஏன் குறை கூறுகிறாய்' என்று கேட்டார். இவ்விதம் ஸ்ரீ கிருஷ்ண சரித்திரம்பருகப்பருகத் தெவிட்டாத ஒன்றாகும்.

*



# பிரம்மோத்ஸவம்

" கோயில் இல்லா ஊரில் குடியிருக்க
வேண்டாம் "

" ஆலயம் தொழுவது சாலவும்
நன்று "

என்ற பழமொழிகள் நம் பாரத நாட்டின் பெருமையையும், புகழையும், ஒருமைப்பாட்டையும் எடுத்துக் காட்டுகின்றன கோயிலை ஆலயம் என்றும் கூறுவார்கள். ஒன்றுபட்டமனத்துடன் ஈடுபட்டு இருக்கும் இடமே ஆலயம் என்பதாகும்.

பாரத நாட்டில் ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு நகரத்திலும் ஆலயங்கள் இருப்பதைக் காணலாம்' சொல்லப்போனால் தமிழ்நாட்டில் கோயில் இல்லா குக்கிராமம் கூட கிடையாது எனலாம். இக்கோயில்களை அக்காலத்தில் அரசர்களும், தனவேந்தர்களும் கட்டி வைத்தனர். இக்கோயில்களே பாரதீய கலாசாரத்திற்கு எடுத்துக்காட்டாகும்.

ஒவ்வொரு கோயிலுக்கும் ஒவ்வொரு புராண வரலாறு காணப்படும். இம்மாதிரி ஆலயங்கள் உள்ள ஊர்களை க்ஷேத்ரங்கள் என்றும், ஸ்தலங்கள் என்றும் கூறுவர். இவ்வாலயங்கள் அங்குள்ள இறைவனைக் கொண்டு சைவ-வைணவ கோயில்கள் என்று கூறுவார்கள். இம்மாதிரி - சைவ - வைணவ க்ஷேத்ரங்கள் தமிழ்நாட்டில்தான் அதிகம்.

---

டாக்டர். டி. ஜி. அனந்தசுப்ரமணியம்
திருப்பதி.

---

இவ்வாலயங்களில் குடி கொண்டிருக்கும் இறைவனை வழிபடுவதற்காகச் சில முறைகளை ஏற்படுத்தியுள்ளனர். அம்முறைக்கு "பூஜை" எனக் கூறுவர். இம்முறைகளைக் கூறும் நூல்களுக்கு "ஆகமம்" எனப் பெயர். இந்த ஆகம நூல்களில் இறைவனை வழிபடும் முறைகள் பற்றிக் கூறப்பட்டுள்ளன. ஆகமங்கள் பொதுவாக சைவ-வைணவ பேதமாக இரண்டு வகைப்படும். இவ்விரண்டு வகைகளிலும் பல வகைகள் உண்டு. ஆனால் வைணவ ஆகமத்தில் முக்யமாக இரண்டு பிரிவுகள் உண்டு. அவைகளாவன: பாஞ்சராத்ர ஆகமம்-வைகானஸ ஆகமம். இவ்விரு பிரிவுகளைக் கொண்ட ஆகமங்கள் பல. ஆனால் எல்லா ஆகமங்களும் இறைவனை வழிபடும் முறைகளைத்தான் கூறுகின்றன.

ஆலயம் கட்டி முடித்து இறைவனை பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்த பிறகு தினமும் ஆகமமுறைப்

படி பூஜைகள் நடத்தப்பட வேண்டும். அந்த பூஜை முறைகள் புராண - ஆகமங்களை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கும். இம்முறைகளில் "உத்ஸவம்" (விழா) என்பது ஒருமுறை. இந்த உத்ஸவங்கள் பல விதம். அவைகளில் அதிகமாக முக்யமாக செய்ய வேண்டிய உத்ஸவம் "மகோத்ஸவம்" என்பது. உத்ஸவமென்றால் என்னவென்பதை ஸ்ரீ பிரச்ன ஸம்ஹிதை என்ற ஆகம நூல் கூறுகிறது.

" आराधनादि यागेभ्यः एषोऽतिप्रीतिवर्धनः ।
महत्प्रीतिर्येन मम उत्सवेन भविष्यति ।।

(அ-30-ச்லோ. 7-8)

ஆராதனை, யாகங்கள் முதலியவைகளில் அதிக மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடியது மகோத்ஸவம். மேலும்—

" उत्सूते हर्षमिति च तस्मादेव महोत्सवः "

மகிழ்ச்சியை எது உண்டுபண்ணுகிறதோ அதுவே மகோத்ஸவம்.

நாரதீய ஸம்ஹிதையில் நாரதர் கூறுகிறார்:



கருட சேவை

" सव इत्युच्यते यज्ञो विद्वद्भिः साधुसम्मतैः ।
उद्गतस्तु सवो यस्मात् तस्मादुत्सव उच्यते ।।

(அ-18-2)

ஸவம் என்பது யாகம். இதை மிகவும் உத்ஸாகமாகச் செய்யும்போது அதுவே மகோத்ஸவமாகும். இந்த உத்ஸவம் மூன்று விதமாக நித்யம், நைமித்திகம், காம்யம் என்று கூறுகிறது நாரதஸம்ஹிதை.

" नित्यो नैमित्तिकः काम्यास्त्रिविधश्चोत्सवो मतः ।।

(அ-18, 3)

வைகானஸ கிரியாதிகார என்ற ஆகம நூலில் கீழ் வருமாறு கூறப்பட்டுள்ளது.

" काल, श्रद्धा, निमित्तार्था उत्सवास्त्रिविधाः स्मृताः ।
मासे तु यस्मिन् कस्मिंश्चित् प्रतिसंवत्सरं हरेः ।।



அலிபிரியிலிருந்து திருமலையின் மாலைத் தோற்றம்



புதிய ஆயிரங்கால் மண்டபம் - திருமலை

क्रियते समयेनैव स वै कालोत्सवो भवेत् ।
श्रद्धया क्रियते यस्तु श्रद्धोत्सव उच्यते ।।
उत्पातेषु निमित्तेषु अनावृष्ट्यादिकेषु वै"

ஒவ்வொரு வருஷமும் செய்யும் உத்ஸவத்திற்கு கால உத்ஸவம் என்றும், சிரத்தையாகச் செய்யப்படும் உத்ஸவம் சிரத்தோத்ஸவமென்றும், ஏதாவது நடக்கக் கூடாதது நடந்துவிட்டால் அதை முன்னிட்டு நடத்தப்படும் உத்ஸவம் நிமித்தோத்ஸவமென்றும்பெயர்.இக்கருத்தே காச்யப ஞானகாண்டம் என்ற வைகானஸ ஆகம நூலிலும் கூறப்பட்டுள்ளது. நாரதீய ஸம்ஹிதையில்,

वत्सरे वत्सरे यस्तु क्रियते स तु नित्यकः ।

ஒவ்வொரு வருடமும் செய்யப்படும் உத்ஸவத்திற்கு நித்யோத்ஸவம் என்றும் இதனையே மகோத்ஸவம் என்றும், பிரம்மோத்ஸவமென்றும் கூறப்படுகிறது. இவ்வபிப்ராயத்தைப் பல ஆகம நூல்கள் கூறுகின்றன.

பூமி நடுக்கம், நெருப்பின் அபாயம், இடி விழுதல், நாட்டில் உணவு கிடைக்காமை (பஞ்சம்) வியாதிகள், அதேபோல் நாட்டிற்கு பகைவர்களால் அச்சம் ஏற்படுதல், மழையின்மை, வால் நக்ஷத்ரம் உண்டாவது போன்ற கெட்டவைகள் தோன்றும்போது செய்யும் உத்ஸவத்திற்கு நிமித்தோத்ஸவம் என்று பெயர்.

" फलेच्छया कृतो यस्तु कामिभिः काम्य उच्यते"

பிரார்த்தனை செய்துகொண்டு செய்யும் உத்ஸவம் காம்ய உத்ஸவம். உதாரணமாக "கல்யாண உத்ஸவத்தைக் கூறலாம்.

" बिम्बाविर्भाव ऋक्षे च प्रतिष्ठातारकेऽपि वा ।
तत्तिथौ वा तीर्थयात्रा निशित्यांकुरपूर्वकम् ।।

(ஸ்ரீ பிரச்ன-அ-30-ச்லோ-10)

என்று மகோத்ஸவத்திற்கு விளக்கம் கூறப்படுகிறது.

அதாவது கோயில் கட்டி கும்பாபிஷேகம் செய்த நாள் அல்லது எப்பொழுது இறைவன் தோன்றினாரோ அந்த நக்ஷத்திர நாள் அல்லது இறைவனை பிரதிஷ்டை செய்த திதியோ இவைகளில் எதுவாக இருந்தாலும் அதிலிருந்து ஆரம்பிக்கப்பட்டு நடத்திவரும் உத்ஸவத்திற்கு மகோத்ஸவம் என்று பெயர். இதற்கு பிரம்மோத்ஸவம் என்று பெயர். ஏனெனில் இந்த உத்ஸவம் நடத்துவது பிரம்மன்தான். அவர் தலைமையேற்று நடத்துவதால் பிரம்மோத்ஸவம் என்று பெயர் பெற்றது. இந்த உத்ஸவங்கள் நடைபெறும் நாட்களை நாரதீயஸம்ஹிதை கூறுகிறது.

द्वादशाहो नवाहश्च सप्ताहश्च तथापरः ।
पञ्चहस्त्रियहो विप्र तथैकाहस्तु कीर्तितः ।।

(அ-18-11.)

உத்ஸவம் பன்னிரண்டு நாட்கள், ஒன்பதுநாட்கள், ஏழுநாட்கள், ஐந்து நாட்கள், மூன்று நாட்கள், ஒரு நாள் நடைபெறும் என்று கூறப்படுகிறது.

மகோத்ஸவ இலக்கணமாவது :

ध्वजारोहणपूर्वस्तु देवताह्वानपूर्वकः ।
अंकुरार्पणपूर्वस्तु विहितस्स्यान्महोत्सवः ।।

(நா-அ-18-8.)

கொடியேற்றல் முதல் தேவதைகளை அழைப்பது, அங்குரார்ப்பணம், தீர்த்தயாத்ரை முதலியவைகளைக் கொண்டது பிரம்மோத்ஸவமென்பதாகும்.

கிரியாதிகாரமென்ற வைகானஸ ஆகமத்தில்,

उत्तमं तु त्रिसप्ताहं मध्यमं तु चतुर्दशं ।
नवाहं वाथ सप्ताहमधमं परिचक्षते ।।

21 நாட்கள் செய்வது உத்தமம், 14 நாட்கள் செய்வது மத்யமம், ஒன்பது அல்லது ஏழு நாட்கள் செய்வது அதமம் என்று பலவாறாக பிரம்மோத்ஸவம் பிரிக்கப்பட்டுள்ளது.

இத்தகைய பிரம்மோத்ஸவம் திருப்பதி திருமலையில் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீ வெங்கடேச்வரனுக்குக் கொண்டாடப்படுகிறது. இந்தத் திருமலையில் ஸ்ரீ ஸ்ரீனிவாஸன் எழுந்

தருளக் காரணமென்ன என்று பார்ப்போம். ஹிரண்யாக்ஷன் என்ற அசுரன் பூமியைப்பாயாகச் சுருட்டிக் கடலில் மறைத்து வைத்துவிட்டான். நான்முகனல் படைக்கும் தொழில் செய்ய முடியவில்லே. அப்பொழுது ஸ்ரீமந் நாராயணமூர்த்தியை பிரார்த்திக்கும்பொழுது பிரம்மாவினுடைய மூக்கிலிருந்து ஒரு கட்டை விரல் அளவிற்கு ஓர் உருவம் கீழே விழுந்தது. அதை நான்முகனும், தேவர்களும் பார்த்தார்கள். அப்பொழுது அந்த உருவம் பெரிதாகி உக்ரமாக உருவம் எடுத்து வெண்மை நிறமான பன்றியாக காக்ஷியளித்தது என்று பாகவதம் மூன்ருவது ஸ்கந்தத்தில் 13வது அத்யாயத்தில் காணப்படுகிறது.

இந்த வராஹம் ஆலிலேமேல் படுத்திருக்கும் ஸ்ரீமந் நாராயணன்தான் என்று வெங்கடேச்வர மகாத்மியம் வராஹ புராண முதல் பாக 33வது அத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது. எப்படியாளுலும் வெள்ளை நிறமான வராஹ அவதாரத்தினே நாராயணன் எடுத்தார் என்பது திண்ணம்.

அந்த வராஹமானது ஸமுத்ரத்தில் குதித்து ஹிரண்யாக்ஷனேக் கொன்று பூமியைநான்முகனிடம் ஒப்படைத்தது. பின் நான்முகன் படைப்புத் தொழிலேச் செய்ய ஆரம்பித்தான். பிறகு அந்த வாரஹம் ஸ்வாமி புஷ்கரிணியில் தங்கிவிட்டது. அதைப் பார்த்து பயந்து தேவாதி முனிவர்கள்,

जय लक्ष्मीश लोकेश जय भूमिधराच्युत ।
जय विष्णो हिरण्याक्षविध्वंसनविचक्षण ।।
दंष्ट्राकरालवदन भ्रुकुटीलेक्षण ।
भयंकरमिदं रूपमत्युग्रं घोरदर्शनम्
दृश्यस्त्वं वरदो भूत्वा वस नित्यमिहैव भोः ।
इत्युक्तैः प्रसन्नात्मा सौम्यरूपी चतुर्भुजः ।।

'ஹே! லக்ஷ்மீ கேள்வனே! ஹே! உலக நாயகனே! ஹிரண்யாக்ஷனே நாசம் செய்தவனே! உன்னுடைய பயங்கர உருவத்தை மாற்றிக் கொண்டு எங்களுக்கு அருள்வாய்' என்று வேண்ட,

श्रीनिवासः सुरान् सर्वान् समाहूयेदमब्रवीत् ।
वैकुण्ठपरमो ह्ये ष वटाख्यो नगोत्तमः ।।
अत्रैव निवसाम्येव श्री, भूमि सहितोह्यहम् ।

(வெ. ம. வ. பு. 35-அ.)

'ஹே தேவர்களே! வைகுண்டத்திற்கு மேலான இந்த திருவேங்கட மலேயிலேயே ஸ்ரீதேவி, பூதேவி ஸஹிதனுக இங்கேயே ஸ்ரீனிவாசன் என்ற பெயருடன் வஸிக்கிறேன்' என்று அபயம் அளித்தார்.

भूमौ क्वापि गिरौ विष्णुः लक्ष्म्या सह विमोदते ।
कलौ युगे च सम्प्राप्ते विशेषाद्वेंकटाचलः ।।
प्रख्यातोऽप्यधिकं भूमौ भविष्यति तपोधनाः।।

(வெ. ம. 112-பக்கம்)

அத்தகைய பூமியில் ஏதோ ஒரு மலேயில் நாராயணன் லக்ஷ்மிதேவியுடன் காக்ஷியளிக்கிருர். கலியுகத்தில் அங்கே சென்று வழிபட்டால் நமக்கு எல்லாவித நன்மைகளுமுண்டாகும் என்று திருமால் கூறியருள முனிவர்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

सान्निध्यमधिकं तत्र करिष्यति रमापतिः ।
विशेषाद्वेंकटाधीशसेवनं साधु भूषणम्
कलिदोषपरीतानां नराणां पापकर्मणाम् ।
वेंकटेशात्परो देवो नास्त्यन्यः शरणं भुवि ।।
स्वामिपुष्करिणीतीर्थसमं नास्ति न चास्ति हि ।।

(வெ. ம. 59-அ)

கலியுகத்தில் திருவேங்கடமலேயில் எழுந்தருளியிருக்கும் லக்ஷ்மீபதியை தரிசித்தால் கலியினுல் ஏற்பட்ட பாபங்களும், துக்கங்களும் நாசமாகி விடும் என்று கருதி முனிவர்களும், தேவர்களும் வந்தார்கள். உலகில் ஸ்வாமி புஷ்கரிணீ என்ற புண்ய தீர்த்தத்திற்குச் சமம் இல்லேவே இல்லே.

அத்தகைய பெம்மானுக்கு பிரம்மோத்ஸவம் நடத்துவதென்பது பெருமையன்ருே! இங்கே பிரம்மோத்ஸவம் நவராத்ரீ காலத்தில் நடைபெறுகிறது. இதற்குச் சான்றுகள்;

லலிதோபாக்யானத்தில் நாராயணன் கூறுகிருர்:



திருத்தேர்

आद्या शक्तिर्महेशस्य चतुर्धा भिन्नविग्रहा ।
भोगे भवानीरूपा सा दुर्गारूपा च संगरे ।।
कोपे च कालिका रूपा पुंरूपा च मदात्मिका।।

'முழு முதல் சக்தி ஈச்வரனுடையது. அந்த சக்தியே இன்பத்தில் பவானீயாகவும், யுத்தத்தில் துர்கையாகவும், கோபத்தில் காளியாகவும் புருஷ உருவத்தில் நானுகவும் உள்ளேன்'

ஆகையால் புருஷ உருவ சக்தியான அந்த ஸ்ரீனிவாஸனுக்கு புரட்டாசிமாஸ நவராத்திரியில்விழா எடுப்பது எவ்வளவு பொருத்தமானது:

புராண வரலாறு பார்ப்போம். வெங்கடேச மகாத்மியத்தில் 50வது அத்யாயத்தில் கீழ்வருமாறு கூறப்படுகிறது.

विधिश्चकार मुनिभिः वैखानसमुखैः सह ।
उत्सवं ध्वजपूर्वं च कन्यामासं गते रवौ ।।

வராஹ புராணத்தில் வைகானஸ ஆகமம் அறிந்த அறிஞர்களால் கன்யாராசியில் சூர்யன் சஞ்சரிக்கும் பொழுது ஸ்ரீனிவாஸனுக்கு பிரம்

மோத்ஸவம் செய்தார்கள். சூரியன் கன்யா ராசியில் இருக்கும் மாதம் புரட்டாசி மாஸமாகும். இந்தக் கணக்கு ஸௌரமான ரீதியாகக் கணக்கிடப்படுகிறது.

வாமன புராணத்தில் (வெங்கடேச மகாத்மியம்) க்ஷேத்ர கண்டத்தில் 43வது அத்யாயத்தில் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது.

मासि भाद्रपदे पुण्ये शुक्लपक्षे तु चैत्रभे ।
स्वामिपुष्करिणीतीरे देवस्य परमात्मनः ।।
उत्सवः कारितः पूर्वं मयैव प्रीतये हरेः ।
तत्र तत्र युगे चास्य विष्णोः स्वामिसरस्तटे ।।
उत्सवान् कारयिष्यन्ति नराः पुण्यकृतोऽमलाः ।
किंचिदाराधनेनैव विष्णुर्भाद्रपदोत्सवे ।।

அதாவது பாத்ரபத மாஸத்தில் சுக்ல பக்ஷத்தில் சித்திரை நக்ஷத்திரத்தில் கூடிய நன்னாளில் கொடியேற்றி விழாவினை(மகோத்ஸவம்)த்தொடக்க வேண்டுமென்று கூறப்படுகிறது பாத்ரபதமாஸமென்றால் சாந்திரமான ரீதியாக புரட்டாசி மாஸமாகும். இந்த மாஸத்தில் சுக்ல பக்ஷத்தில் பிரதமையன்று சித்திரை நக்ஷத்திரம் வரும். இந்த நக்ஷத்திரத்தின் ஒன்பதாவது நக்ஷத்திரம். திருவோண (சிரவண) நக்ஷத்திரமாகும். அன்றைய தினம் சக்ரஸ்நானம் என்று சொல்லக்கூடிய தீர்த்தோத்ஸவம் நடைபெறும். இந்த முறையைப் பின்பற்றி திருமலையில் ஸ்ரீனிவாஸனுக்கு பிரம்மோத்ஸவம் நடைபெறுகிறது. ஆனால், இந்த பாத்ரபதம், கன்யாமாஸம் இவ்விரண்டையும் தவிர்த்து 'ஆச்விஜ' மாஸத்திலேயே இந்த உத்ஸவம் நடைபெற்று வருகிறது. பாத்ரபதமாஸ உத்ஸவம் என்பது அதிகமாஸ காலத்தில் வரக்கூடும். அப்பொழுது அந்த உத்ஸவத்தை ஸாதாரணமாக செய்துவிட்டு கன்யா மாதத்தில் வரும் உத்ஸவத்தை விசேஷமாகச் செய்ய வேண்டும். இரண்டு உத்ஸவங்களில் இரண்டாவதற்குத்தான் முக்யத்வம் கொடுக்க வேண்டுமென்று கூறப்படுகிறது. முன்பு கூறியபடி ஒன்பது நாள் உத்ஸவம் என்பது மத்யமமாகும். இந்த ஒன்பது நாள் உத்ஸவம் ஸாத்விக உத்ஸவமாகிறது.

महोत्सवः सात्विकःस्यात् तीर्थस्तु नवमेऽहनि ।

என்று ஸ்ரீப்ரச்னஸம்ஹிதை கூறுகிறது. அடுத்தது ஸ்ரீனிவாஸனுக்கு பல நாமாக்கள் இருக்கும்போது, 'கோவிந்த' என்ற நாமத்தை உச்சரிக்கக் காரணமாவது

नष्टां तु धरणीं पूर्वमविन्दत् यत् गुहागतां ।
गोविन्द इति तेनाहं वेदैर्वाग्भिरभिष्टुतः ।।

வராஹ அவதாரமெடுத்துப் பூமியைக் காப்பாற்றிய அதே வராஹ மூர்த்தியே ஸ்ரீனிவாஸனைகக் காக்ஷியளிப்பதால் 'கோவிந்த' என்று அழைக்கிறார்கள் ("गां = பூமியை, अविन्दत् = காப்பாற்றினன்) गोविन्द" என்ற சொல் உண்டாயிற்று. இந்தக் கருத்தையே வெங்கடேச மகாத்மியமும் கூறுகிறது.

अङ्गवङ्गकलिङ्गेषु गौडकाश्मीरसिन्धुषु ।
चोलमालवपाण्ड्येषु कोसलेषु कुशेषु च ।।
वसन्तस्ते जनास्सर्वे सकुटुम्बाः समाययुः ।
घुष्यन्तः संघशश्चोच्चैः "गोविन्दे" ति पुनः पुनः ।।

அங்கம், வங்கம் கலிங்கம், கௌடம், காச்மீரம் சோள, மாளவ, பாண்ட்ய, கோஸலம் முதலிய நாட்டில் வஸிக்கும் மக்கள் குடும்பத்துடன் 'கோவிந்த' என்று உரக்கச் சொல்லிக்கொண்டு கூட்டம் கூட்டமாக வருகிறார்கள்.

மலையைக் கால் நடையால் ஏறி ஸ்ரீனிவாஸனைத் தெரிசிக்க வேண்டுமென்பதற்குக் காரணம் ஸ்ரீனிவாஸனே வராஹ புராணத்தில் கூறுகிறார்:

वर्षे वर्षे तु मासेऽस्मिन् कन्याराशि गते रवौ ।
ये केचिदत्र कुर्वन्ति ब्रह्मक्लृप्तोत्सवं मम ।।
ते यान्ति ब्रह्मणो लोकं भूमौ कामानवाप्य च ।
इदमुत्सवमुद्दिश्य सेवार्थं यस्तु वासतः ।।
क्रमते पदमेकं तु गन्तुं शेषगिरिं प्रति ।
पदस्यैकस्य तस्यैव फलं भवति मत्पदम् ।।

'ஒவ்வொரு வருஷமும் புரட்டாசி மாத பிரம்மோத்ஸவத்தைத் தெரிசிக்க யாரொருவர் தன் இருப்பிடத்திலிருந்து கால் நடையாக வருகிறார்களோ அவர்களுக்கு எல்லாவித ஸௌபாக்யங்களைக் கொடுத்து மோக்ஷத்தையும் கொடுப்பேன்'.

பிரம்மோத்ஸவத்தில் வாஹனங்களைப் பற்றி வைகானஸ ஆகமமான கிரியாதிகாரமென்ற நூலில் கூறப்படுகிறது. பிரம்மோத்ஸவம் 21 நாட்கள் கொண்டாடப்பட்டதாகக்கூறி அந்நாட்களில் காலை மாலை நேரங்களில் எந்தெந்த வாஹனங்கள் என்று விஸ்தாரமாகக் கூறப்பட்டுள்ளது. அவைகளை விவரிப்பின் கட்டுரை விரிவடையும்.

रथं वा कुञ्जरं वापि शिबिकां वा स्वलङ्कृताम् ।।

எல்லா ஆகமங்களில் தேர், யானை, பல்லக்கு இம்மூன்றையும் காணலாம்.

यानि त्वादधते पदानि च मुने नारायणाद्रिं प्रति
स्तोकं स्तोकमपि द्विजा अपि जनास्तेषां फलं यच्छृणु ।
यावद्वेंकटशैलमात्मगृहतस्तावत्पदानां क्रमात्
प्रायश्चैव पदे पदे क्रतुफलं भूयाद्भुवि प्राणिनाम् ।।

எவனொருவன் தன் வீட்டிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக கால்களால் நடந்து நாராயணாத்ரியையும், வேங்கடாத்ரியையும் அடைகிறானோ அவனுடைய ஒவ்வொரு அடிக்கும் ஒவ்வொரு யாகத்தின் பலன் கிடைக்கும் என்று வாமன புராணம் கூறுகிறது.



20-ம் பக்கத் தொடர்ச்சி)

உபசரித்து,தான் உண்டுபார்த்த,நல்ல சுவையான கனிகளைக் கொடுத்தாள்' அதை ஏற்றுக் கொண்டு, சபரி விரும் பியபடியே மேல் வீட்டையும் கொடுத்தான்.

இராமாவதாரத்தில் ஸ்ரீ ராமன் யுத்தம் முடிந்து, அயோத்திக்கு வந்து பட்டாபிஷேகம் செய்து கொண்டபின், தானே வலிய வந்து கட்டித் தழுவிக் கொண்டது அனுமன் ஒருவனையே.

ஸ்ரீமத் ராமாயணத்தின் சரம ஸ்லோகமாவது:

'' ஸக்ரு தேவ ப்ரபந்நாய தவாஸ் மீதிச யாசதே
அபயம் ஸர்வ பூதேப்யோ ததாமியே -தத் வ்ரதம் மம''

இனி கிருஷ்ணவதாரத்தைப் பற்றிய ஒப்பு நோக்கினைக் காண்போம் :

கிருஷ்ணவதாரம் துவாபர யுகத்தில் ஏற்பட்டது. இந்த அவதாரத்தில் பகவானுன ஸ்ரீமந் நாராயணன் சிசுபாலன், தந்த வக்ரன், கம்சன் முதலானவர்களின் வதத்திற்காக இந்த அவதாரத்தை மேற்கொண்டான். வசுதேவர், தேவகி தம்பதியர், பகவானே தங்களுக்குப் புத்திரனுக அவதரிக்க வேணும் என்று மூன்று முறை பிரார்த்தித்துக் கொண்டனர். அதன்படி ஸ்ரீமந் நாராயணன் மூன்ருவது முறையாக வசுதேவ, தேவகி தம்பதியருக்குக் கிருஷ்ணனுக அவதாரம் செய்தான். எம்பெருமான் அவதாரம் செய்யும் போது, பிராட்டியை பீஷ்மக மகாராஜனுக்கு மகளாக ருக்மணியாக அவதாரம் செய்யும்படி நியமனம் செய்திருந்தான்.

கிருஷ்ணனும் மற்றும் பாண்டவர்கள், துரியோதனுதியர்கள் எல்லோரும் சந்த்ரவம்சத்தை சேர்ந்தவர்கள்.

கிருஷ்ணவதாரத்தை கூறும் நூல்களான மகாபாரதம், ஸ்ரீமத் பாகவதமும் ஸ்ரீமந் நாராயணனின் அம்சமான ஸ்ரீவியாச பகவானுல் இயற்றப்பட்டது.

சந்த்ர வம்சத்து மன்னர்களுக்கெல்லாம் பொதுவாக அநேக புத்திரர்கள் இருந்தனர்.

சந்த்ர வம்சத்து மன்னர்களுக்கு குலகுரு, 'கர்க்கர்' என்ற மகரிஷியாகும்

கல்வி முதலிய வித்தைகளை குரு மூலமாகத் தான் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற நியமனப் படியே ஸ்ரீ கிருஷ்ணனும், 'சாந்தீபினி' என்ற மகரிஷியிடம் குருகுலவாசம் செய்து கற்றுக்கொண்டார். இவருடன் கூட குருகுலவாசம் செய்தவர், கண்ணனின் நண்பரான குசேலர் என்பதை நினைவில் கொள்ளவேண்டியது.

கிருஷ்ணன் தான் அவதாரமானதிலிருந்தே தான், பகவான் என்று வெளிப்படையாகவே சொல்லி வந்தான். கண்ணன், சங்கு, சக்ரம், கதை முதலிய ஆயுதங்களுடன் பீதாம் பரதாரியாய் அவதரித்தான் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டியது.

கிருஷ்ணவதாரம் சிறைச்சாலையில் நடுஇரவில் ஏற்பட்டது. பெரியாழ்வார், தன்னுடைய பெரியாழ்வார் திருமொழி 1ம் பத்து, 2ம் திருமொழி 6ம் பாசுரத்தில், 'அத்தத்தின் பத்தா நாள் தோன்றிய அச்சுதன்' என்று கூறுகிறுர். அதாவது அஸ்த நக்ஷத்திரத்திலிருந்து முன் பத்தாவது நக்ஷத்திரம் ரோகிணியாகும். இதுவே கண்ணனின் பிறந்த நக்ஷத்திரம் அஸ்த நக்ஷத்திரத்திலிருந்து பின் பத்தாவது நக்ஷத்திரம் திருவோணமாகும். இது திருமாலுடைய நக்ஷத்திரமாகும்.

கிருஷ்ணவதாரமும் தேஹ சம்பந்தமில்லாத அவதாரமாகும். ஔரச புத்திரன் (சுக்ல சுரோணித சேர்க்கை) என்று சொல்ல முடியாது.

கிருஷ்ணன் தன் அவதார முதற்கொண்டு,தன் அடிச்சோதிக்குச் செல்லும் வரை அதிமானுஷ (சாதாரண மனிதர்களால் செய்ய முடியாத) அரிய பெரிய செயல்களைச் செய்து காட்டினுன். சகடாசுரன், தேனுகாசுரன், கபித்தாசுரன், காளிங்கன் ஆகியோரது கர்வத்தையும் தன் வினைகளினுல் அடக்கினுன் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளலாம்.

ஸ்ரீமந் நாராயணன் எடுத்த முக்கிய பத்து அவதாரங்களிலும் கிருஷ்ணவதாரமே எல்லா அம்சங்களுடன் பூர்ணமாக இருந்தபடியால் இதையே பூர்ணவதாரம் என்று கூறுவர்.

கிருஷ்ணவதாரத்தை 'நிவிர்த்தி மார்க்கம்' என்று இந்த அவதாரத்தை கூறும் நூல்களான ஸ்ரீமத் பாகவதமும், மகாபாரதமும் தெரிவிக்கின்றன. அதாவது குடும்பத்தில் இருந்து கொண்டே ஒருவன் விட்டு விடவேண்டியவை எவை, கடைப்பிடித்துக் கொள்ள வேண்டியது எவை என்பதைத் தெளிவாகக் கூறியுள்ளது. எதிலும் பற்றை வைக்காமலும், கர்மாக்களைப் பலன் எதிர்பார்த்துச் செய்யாமல், தன் கடமைகளைச் சரிவர செய்ய வேண்டும் என்று கூறியிருப்பதால் இதற்கு நிவிர்த்தி மார்க்கம் எனப் பெயர் வந்தது.

கிருஷ்ணவதாரத்தில் 'கிருஷ்ணன் சொன்னது போல் செய்' என்பது பழமொழியாகும். 'க்ருஷ்ணஸ்ய வசனம் ஸ்ரோதவ்யம்ஸ: தர்ம:' என்பது முதியோர்வாக்காகும்.

கிருஷ்ணவதாரத்தில் கிருஷ்ணனுக்கு அநேக பத்னிகளுண்டு என்று ஸ்ரீமத் பாகவதம் போன்ற நூல்கள் தெரிவிக்கின்றன. இருப்பினும் கிருஷ்ணன் நித்ய ப்ரும்மச்சாரி என்றே பெயர் கொண்டவன். இதுவும் அவன் வாக்கினுலேயே கூறியுள்ளான். யமுனை நதியில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓட, இக்கரையிலிருந்து அக்கரையிலுள்ள துர்வாசர் ஆஸ்ரமத்திற்கு சென்று, பிக்ஷை செய்து வைக்க முடியாமல் தவித்த

ருக்மணியிடம், "நித்ய ப்ரும்மச்சாரி யான கிருஷ்ணன்' கூறுகிறான், 'வழி விட வேண்டும்" என்று யமுனை நதி யிடம் சொல்லும்படி சொன்னான். அவளும் அவ்விதம் சொன்னவுடன் யமுனையும் அக்கரைக்குச் செல்ல வழி விட்டது என்ற விருத்தாந்தமும் நினைவில் கொள்ள வேண்டியதாகும்.

கிருஷ்ணவதாரத்திலும் முதன் முதலில் வதம் செய்யப்பட்டதும் 'பூதனை' என்ற அரக்க ஸ்திரீயாகும்.

கிருஷ்ணவதாரத்தில் ஆதிசேஷனுடைய அம்சமாகவும், கிருஷ்ணனுக்கு தமயனாகவும் அவதாரம் செய்த பலராமருக்கு கிருஷ்ணன் தினமும் பாதசேவை செய்து பூஜித்து வந்தார்.

தண்டகாரண்ய வாசிகளான முனிவர்கள், துவாபர யுகத்தில் கோபஸ்திரீகளாக அவதாரம் செய்திருந்தனர். முன் அவதாரத்தில் பகவானுடைய திருமேனியை ஆலிங்கனம் செய்து கொள்ள வேணும் என்ற அவர்களது விருப்பத்தை ராஸக்ரீடை என்ற வ்யாஜத்தால் நிறைவு பெறும்படி செய்தான். ராஸக்ரீடை செய்த போது பகவானுக்கு வயது ஏழு என்பதை மனதில் நினைவு கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

பாரத யுத்தம் ஏற்படக் காரணமாக இருந்ததும் ஒரு ஸ்திரீயே யாகும். அவள் திரௌபதியாகும். துரியோதனனால் சபையில், திரௌபதிக்கு ஏற்பட்ட அவமானத்தின் காரணமாகத் தன் தலைமுடியை அவிழ்த்த துரியோதனன், துச்சாதனன் ஆகிய இருவருடைய இரத்தத்தில், தன் தலை முடியை நனைத்த பிறகு தான், தன் முடியை வாரி முடிந்து கொள்வதாக சபதம் செய்திருந்தாள். தவிர பீமனும், அர்ஜுனனும், துரியோதனாதியரைக் கொல்வதாக சபையில் சூளுரை செய்திருந்தனர்.

இராமாவதாரத்தில் தாஸனாக இருந்த, சிறிய திருவடியாகிய அனுமன், கிருஷ்ணவதாரத்தில், பாரத யுத்தத்தின்போது அர்ஜுனனுடைய தேரின் கொடியில் (எல்லோர் தலைக்கும் மேலாக) இருந்து கொண்டு, பாண்டவர்களுக்குச் சகாயமாக, அவ்வப்போது, துரியோதனாதியருக்கு மிகுந்த பயத்தையும் பீதியையும் உண்டு பண்ணுவதற்காகக் கர்ஜனை புரிந்து வந்தார். தவிர பகவானை கண்ணனால், அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்ட ஸ்ரீமத் பகவத் கீதையை, தேரின் கொடியிலமர்ந்து, நேரில் கேட்கும் பாக்யமும் கிடைத்தது.

ஜாம்பவானுக்கு பகவானுடன் யுத்தம் செய்ய வேணும் என்ற விருப்பம், இவ்அவதாரத்தில் நிறைவேறியது. ஸ்யமந்தக மணி என்ற ரத்னம் காணாமல் போனபடியால், அதைக் கிருஷ்ணன்தான் எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறான் என்ற அபவாதம் ஏற்பட்டது. இந்த அபவாதத்தை போக்குவதற்காக ஸ்யமந்தகமணியை தேடிக் கொண்டு வரும் சமயம், ஒரு குகையில் புகுந்து போக நேரிட்டது. அந்த குகையினுள் ஸ்யமந்தகமணி என்ற ரத்னம் இருப்பதைப் பார்த்தார் கிருஷ்ணன். அதை எடுக்கும் போது குகையினுள்ளிருந்த ஜாம்பவானுடன் யுத்தம் 21 நாட்கள் செய்தார். யுத்தம் செய்யும் போது, இராமனாகவும், கிருஷ்ணனாகவும் மாறி, மாறி காட்சி தந்து, தான் யார் என்பதையும் காட்டி ஜாம்பவானுடைய விருப்பத்தையும் நிறைவேற்றி வைத்தார். ஜாம்பவான் கிருஷ்ணனுக்கு ஸ்யமந்தக மணியைக் கொடுத்ததுமில்லாமல் தன் புத்ரியான ஜாம்பவதி என்ற கன்னிகையையும் மணம் செய்து கொடுத்தார்.

கிருஷ்ணவதாரத்தில் கிருஷ்ணனுடைய வார்த்தைகள் எல்லாமே உபதேசமாகும்.

லோக க்ஷேமார்த்தமாக, பாரத யுத்த ஆரம்பத்தில், பகவானை கண்ணன், அர்ஜுனனை வியாஜமாக வைத்து, 'ஸ்ரீமத் பகவத் கீதை' என்கிற உபநிஷத்தாகிற அம்ருதத்தை உபதேசம் செய்தருளினான். யுத்தம் முடிந்த பிறகு கண்ணன், யுதிஷ்டிரரை நோக்கி, 'மகா ஞானியும், தபஸ்வியுமான, பீஷ்மாசார்யர் மறையும் காலம் நெருங்கி விட்டது. தவிர பீஷ்மர் இப்போது என்னையும் தியானிக்கிறார். பீஷ்மரிடமிருந்து தர்மங்களையெல்லாம் அறிந்து கொள்ளுமாறு யுதிஷ்டிரரிடம் சொன்னார். பீஷ்மர் மறைந்து விட்டால், உலகத்திற்குத் தர்மங்களை எடுத்துச் சொல்வதற்கு மனிதர்களே கிடையாது. தாமதியாமல் பீஷ்மரிடம் உபதேசம் பெற்றுக் கொள்' என்றதும்' யுதிஷ்டிரரும், பீஷ்மரை வணங்கி' தனக்கு எல்லா தர்மங்களையும் உபதேசிக்க வேண்டும் என்றும் பிரார்த்தித்தார். பீஷ்மாசாரியரும் அக மகிழ்ந்து, பகவானை கண்ணபிரானை சாக்ஷியாக வைத்தும், அவர் எதிரிலேயே ஒப்பு உயர்வு இல்லாத, 'ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாமம்' என்ற மிக அற்புதமான ஸ்தோத்திரத்தை, யுதிஷ்டிரருக்கு உபதேசம் செய்தருளினார்.

கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் முதலியவைகளைக் கண்ணன் உபதேசித்திருந்தாலும், இவைகளைச் சாதாரண மனிதர்கள், கடைப்பிடித்து அதன்படி நடக்க முடியாமலிருந்தபடியால் எல்லோரும் எளிதில் கைக்கொள்ளும்படியாக, 'ப்ரபத்தி யோகம்' என்கிற சரணாகதி வழியை உபதேசித்துள்ளான். தன்னையும், தன் உடமைகளையும் தன்னுடையது என்று எண்ணாமல், எல்லாம் பகவானுடையது என்று நினைத்து, நாம் எவ்வளவு குற்றமுள்ளவர்களாக இருப்பினும், அவன் திருவடிகளில் வணங்கி, நம் குற்றங்களைச் சொல்லி, 'நான் மகா அபராதி, வேறு கதி இல்லாதவன், பகவான்தான் காப்பாற்ற வேணும்' என்று அவன் திருவடிகளில் சரணமடைந்தால், அவன் நம் குற்றங்களைப் பாராமல், நம்மைக்கைவிடா

மல் காத்து ரக்ஷிக்கிறுன் என்பதே சரணுகதியின் தத்துவமாகும்.

இராமாவதாரத்தில் சபரி என்ற வேடுவ ஸ்திரீக்கு மேல் வீட்டை கொடுத்தது போலவே, கிருஷ்ணு வதாரத்தில் கண்ணன் ததிபாண்டவன் என்ற ஆயர்குல வயோதிகர் ஒருவருக்கும், அவருடைய தயிர் பானைக்கும் சேர்த்தே மேல் வீட்டை கொடுத்தருளினுன்.

கிருஷ்ணுவதாரத்தில் கண்ண பிரான் துவாரகையில் அரசாட்சி செய்து கொண்டிருந்தபோது, அவருடைய குருகுலவாச தோழரான குசேலர் காண வந்தார். அப்போது கண்ணன் தானே ஓடிவந்து, அவரை வரவேற்று, 'தானே வலிய வந்து குசேலரை கட்டித் தழுவிக் கொண்டார். கிருஷ்ணன் குசேலரைத் தவிர வேறு யாரையும் இந்த அவதாரத்தில், தானே வலிய வந்து கட்டித் தழுவிக் கொள்ளவில்லை என்பதையும் மனதில் கொள்ள வேணும்.

கண்ணன் தன் அவதார முடிவுக்காக யோக நித்திரையில் ஒரு மரத்தின் கிளைகளில் கால்களை நீட்டி படுத்துக் கொண்டிருந்தார். அது சமயம் முன் ஜன்மாவில் வாலியாக இருந்தவன், இந்த ஜன்மாவில் வேடனுகப் பிறந்து இருந்தான். வேட்டைக்காக வந்த அந்த வேடன், பகவானின் கால்களை மரக்கிளைகளில் பார்த்து, அது புரு என்று நினைத்து மறைந்து நின்று தன் அம்பை, பகவானின் கால்களைக் குறிவைத்துவிட்டான். பகவானின் உள்ளங்காலில் அம்பு பட்டதும் பகவானின் அவதார முடிவு ஏற்பட்டு வைகுண்டத்திற்குச் சென்றுர்.

கிருஷ்ணுவதாரத்தில் ருக்மணி என்ற ஜீவாத்மா பரமாத்வை அடைய தவித்துக் கொண்டிருந்தது. அப்போது ஓர் உத்தம அந்தணர் ஜீவாத்மாவாகிற ருக்மணி பிராட்டியை, துவாரகையில் இருந்த பரமாத்மாவுடன் சேர்த்து வைப்பதற்கு ஆசாரியனுக இருந்தார் என்பது குறிப்பிடத் தக்கது.

கிருஷ்ணுவதாரத்தின் சரம ஸ்லோகமாவது:

"ஸர்வதர்மான் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுச:"

முடிவுரை :

எம்பெருமானுல் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்கள் ஆழ்வார்கள். ஆழ்வார்கள் எம்பெருமானைத் தமது நெஞ்சமென்னும் உட்கண்ணுல் நன்கு அனுபவித்து, அவ்வனுபவம் உள்ளடங்கிக் கிடக்காமல், பெருக்கெடுத்துப் புறம்பே வழிய வந்தவைகளே ஈரச் சொற்களாகிற அருளிச் செயல்களாகும். ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களெல்லாம், அழகு பொருந்திய, தேன் சுவை போன்ற, தெள்ளிய தமிழிலேயே இருக்கின்றன.

ஆழ்வார்களில் மதுர கவியாழ்வாரையும் திருப்பாணுழ்வாரையும் தவிர மற்ற எல்லா ஆழ்வார்களும், இராமவதாரத்தையும், கிருஷ்ணுவதாரத்தையும் நன்கு அனுபவித்துப் பாடியுள்ளனர். இவ்விதம் ஆழ்வார்கள் பாடியிருந்தபோதிலும், பரமனுக்குப் பல்லாண்டு பாடிய பட்டர் பிரானுகிய பெரியாழ்வாரைப் போல் கண்ணனையும், அவன் அவதார குண சேஷ்டிதங்களையும், அனுபவித்துப் பாடியிருப்பது போல் வேறு எந்த ஆழ்வாரும் பாடவில்லை என்றுல் அது மிகையாகாது. பெரியாழ்வார் தன் முதல் பிரபந்தமாகிய, 'பெரியாழ்வார் திருமொழி'யின் தொடக்கமே, கண்ணனின் அவதார வைபவத்தைக் கூறும் 'வண்ண மாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்' என்று தொடங்கி, அழகு தமிழில் அழகு மிளிரப் பாடியிருக்கிறுர். தவிர பெரியாழ்வார் கண்ணனின் அவதாரம் முதல், 'தாலாட்டுப் பருவம்', 'அம்புலிப் பருவம்', 'செங்கீரைப் பருவம்' என்ற எல்லாப் பருவங்களையும் வைத்து, பிள்ளைத் தமிழாகவே பாடியிருப்பது மிகவும் சிறப்பானது. பிற்காலத்தில் ஏற்பட்டுள்ள மற்ற பிள்ளைத் தமிழுக்கு எல்லாம், பெரியாழ்வாரின் பிள்ளைத் தமிழ்தான் வித்தாக அமைந்துள்ளது என்று ஆணித்தரமாகச் சொல்லாம். இது தவிர பெரியாழ்வார், கண்ணனைக் குறித்து 'நீராட்டல்', 'பூச்சூடல்', 'காப்பிடல்' முதலிய வைபவங்களையும் வைத்து அருளிச் செய்து கண்ணனை நன்கு அனுபவித்துள்ளார். இவை தவிர பெரியாழ்வாரின் திருமொழி 3ம் பத்து 9ம் திருமொழியில் 'என்னுதன் தேவிக்கு அன்று இன்பப் பூ ஈயா தாள்' எனத் தொடங்கும் பத்து பாசுரங்களிலும், முதல் பாசுரம் கண்ணனைக் குறித்தும், அடுத்த பாசுரம் இராமனைக் குறிப்பதுமாகப்

பத்து பாசுரங்களும் அருளிச் செய் திருப்பது மிக விசேஷமாகும். பெரியாழ்வார் இராமாவதாரத்தையும் சிறப்பித்துப் பல பாடல்கள் பாடியுள்ளார். 3ம் பத்து, 10ம் திருமொழியில் இலங்கைக்கு தூது சென்ற அனுமன் பிராட்டியைக் கண்டு, இராமன் கூறியதாகச் சில அடையாளங்களைக் கூறி, பிராட்டியிடம் கணையாழியை கொடுப்பதாக 'நெறிந்த கருங்குழல் மடவாய் நின்னடியேன் விண்ணப்பம்' எனத் தொடங்கும் பத்து பாசுரங்கள் படித்து இன்பறத்தக்கவையாகும்.

இராமாவதாரத்தையும், கிருஷ்ணாவதாரத்தையும் சிறப்பித்துப் பாடியுள்ள மற்ற ஆழ்வார்களில், குலசேகரரும், திருமங்கை மன்னனும், நம்மாழ்வாரும் முக்யமானவர்கள். குலசேகரர் தன் பெருமாள் திருமொழியில் 8, 9, 10 ஆகிய திருமொழியில் இராமாயணத்தையே சுருக்கமாக பாடியிருப்பதிலிருந்து, இவருக்கு இராமாவதாரத்தில் உள்ள ஈடுபாடு தெளிவாகத் தெரியும். திருமங்கை மன்னனும் தன் பெரிய திருமொழி 5ம் பத்து 8ம் திருமொழியில், 'ஏழை ஏதலன் கீழ்மகனென்னாது' 'வாத மாமகன் மர்க்கடம் விலங்கு' முதலிய பாசுரங்கள் படிக்கப் படிக்க தெவிட்டாத தேனாகும். நம்மாழ்வாரோ, 'உண்ணும் சோறு, பருகுநீர், தின்னும் வெற்றிலையெல்லாம் கண்ணன் என்று அனுபவித்து ப்பாடியிருக்கிறார். இவ்வாழ்வார் இராமனைப் பாடும் போது, 'கற்பார் இராமபிரானை யல்லால் மற்றும் கற்பரோ', என்று பாடியுள்ளார். இங்குக் 'கற்பார் இராமபிரானையல்லால்' என்பது, நாம் கற்றுக் கொள்ள வேண்டியது, தெரிந்து கொள்ள வேண்டியதெல்லாம், இராமனிடமிருந்துதான் கற்றுக் கொள்ள வேணும் என்பதைக் குறிக்கும்.

ஆழ்வார்களைத் தவிர, நாயன்மார்களும், கவிச்சக்ரவர்த்தி கம்பர், ஒட்டக் கூத்தர், புகழேந்தி போன்ற தெய்வப் புலவர்களும் இராம, கிருஷ்ணர்களைப்பாடியுள்ளனர். இவர்களைத் தவிர, புரந்தரதாஸர், சங்கீத மும்மூர்த்திகளான தியாகராஜர், முத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்யாமா ஸாஸ்த்ரிகள், அருணாசலக் கவிராயர், கோபால கிருஷ்ண பாரதியார் போன்ற கவிவாணர்களும், மற்றும் ஊத்துக்காடு வெங்கட சுப்பையர், லீலா சுகர் போன்ற பகவத் அனுபூதிமான்களும், பிற்காலத்துப் பல கவிஞர்களும், தேசிய கவிஞர் சி. சுப்ரமணிய பாரதியார்போன்ற பலரும் கிருஷ்ணனையும், ராமனையும் குறித்துப் பாடியுள்ளவைகளிலெல்லாம் சொற்சுவை, பொருட்சுவை, எல்லாம் மிகுந்து காணப்படுவதைக் காணலாம்.

நாமும் நம் வாழ்க்கையில், இராமன் வாழ்ந்து காட்டிய விதமாகவும், கிருஷ்ணன் சொல்லியிருப்பது போலவும், குடும்பத்தில் இருந்து கொண்டே, மாதா பிதாக்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகள், எல்லோரிடத்தும் அன்பாயிருத்தல், பிறருக்கு ஹிம்சை செய்யாதிருத்தல் முதலியவைகளைக் கடைப்பிடித்து நடக்க வேண்டியது. இதேபோல் கிருஷ்ணன் சொன்னது போல் தர்மங்களைக் கடைப்பிடித்து, அதுபோல் வாழ்ந்தும் தான், தன்னுடையது என்று எண்ணமல் எல்லாம் பகவானுடையது என்று எண்ணி, அவனைத் தவிர வேறு கதி கிடையாது, அவன்தான் காப்பாற்ற வேண்டும் என்றும், எதிலும் ஆசை வைக்காமலும், செய்யும் கர்மாக்களின் பலனை எதிர்பார்க்காமலும், நம் கடமைகளைச் சரிவர செய்து வந்தால் பகவான் நம்மைக் காத்து உரிய காலத்தில் நமக்கு மேல் வீட்டையும் அளிப்பான் என்ற நம்பிக்கையுடன் வாழ்வோமாக. ★

## விநாகர் பிரும்மசாரியா? கிருஹஸ்தரா?

கணபதி பிரும்மசாரி என்று சொல்வது வழக்கம். அவருக்கு ஸித்தி, புத்தி, வல்லபை என்ற மூன்று மனைவிகள் என்றும் சொல்லப் படுகிறது. எது சரி? இரண்டும் சரிதான்.

ஞானம் என்பது பிரும்ம ஸ்வரூபம். அதுவே கணபதி. புத்தி-இச்சா சக்தி, சித்தி—கிரியா சக்தி. இச்சா சக்தியும் கூட இருந்தால் தான் ஞானம் ஒரு காரியத்தைச் செய்ய முடியும். வல்லபை என்பவளே ஞான சக்தி. ஞானமூர்த்தியுடன் ஞான சக்தி கலந்தவள். அதனால்தான் இன்னாருடன் சமேத என்று சொல்லும்போது வல்லபை சமேத கணபதி என்று வல்லபையின் பெயர் கூறப்படுகிறது.

சிருஷ்டி, பரிபாலனம் இதை இரண்டையும் செய்யும்போது விநாயகர் கிருஹஸ்தரே. பிரபஞ்சம் ஒடுங்கும்போது இச்சை கிரியை சக்திகளை தனக்குள்ளே லயப்படுத்தி கேவல ஞானமாக இருக்கிறார். ஆகவே அப்போது பிரும்மசர்யம். உலகில் சில அசுரர்கள் அஞ்ஞானத்தின் உருவாகத் தோன்றி ஸாதுக்களை இம்சிக்கின்றனர். அந்த அஞ்ஞானத்தை அகற்ற. அதாவது அசுரனை சம்ஹாரம் செய்யும்போது ஞானமே முன் நிற்க வேண்டும். பெண் வடிவமான இச்சா கிரியா சக்திகள் கூட இருந்தால் கருணை அதிகமாகி அசுர சிக்ஷை நடைபெறாது. அதனால் அவருடைய பல அவதாரங்களில் சில பிரும்மசாரியாக அமைந்திருக்கின்றன.

கணபதிக்கு இம்மூன்று பேர்தான் பத்னிகள் என்று நினைக்க வேண்டாம். புத்திதேவி, முக்திதேவி என்று இரு உப பத்னிகளும் உண்டு. புத்தியுடன் பக்தி சேர்ந்து சித்தி பெற்றால் முக்தி கிடைக்கும் என்பதே இதன் தத்வார்த்தம்.

வைஷ்ணவர்கள் இவரை விஷ்வக்ஸேனர் என்று வழிபட்டு வணங்கி வருகின்றனர்.

நாமும் அவரை சித்தி புத்தி வல்லபை ஸமேதராக வணங்கி நற்கதி அடைவோமா?

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸந்யாஸ யோகம்

அத்யாயம் — 18.

பகுதி — 24.

இயற்கையை உற்று நோக்கினுல் அதனிடம் உள்ள ஒரு தனிப்பெருமை நமக்கு நன்கு புலப்படும். இயற்கையில் நாம் காணும் ஒவ்வொரு பொருளிடத்தும் ஒரு சிறப்பு அம்சம் நிலவுகிறது. ஒன்றுக்கும் உதவாதது போல் தோன்றும் வஸ்துக்களிலும் நன்கு ஆராய்ந்தால் பயன்படும் அம்சங்கள் பல இருப்பதைக் காணலாம். எதையும் நாம் பயன்படுத்தும் விதம், பார்க்கும் கோணம், பொருள்படுத்தும் முறை ஆகியவற்றைப் பொறுத்தே அதனது ஏற்றம் அமைந்திருக்கிறது.

உதாரணமாக ஒரு மூங்கில் குழாய் ஒன்று பயன்படாததுபோல் காணப்படுகிறது. நம் காலில் பட்டால் அது நொறுங்கிச் செத்தையாய்ப் போய் விடும். அந்த வஸ்து கலைஞனின் கையில் பட்டதும் எத்தகைய அரிய இசைக் கருவியாக ஆகிவிடுகிறது. கண்ணனது புல்லாங்குழலிசையில் மயங்காத உயிரே கிடையாது. அவ்னது வேணுகானம் மண்ணையும், விண்ணையும் ஒருங்கே தன்பால் ஈர்க்கும் வல்லமை படைத்தது. சாதாரணப் பொருளாகிய புல்லாங்குழலில் அவன் பண்ணும் அற்புதம் அத்தகையது என்றுல் சேதனம் அதாவது அறிவு சொரூபமாகிய நம் போன்றவரிடத்தில் அவன் செய்யும் அதிசயச் செயல் எத்தகையது என்பது அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

மன்மனு பவ மத் பக்தோ பவ
மத்யாஜீ மாம் நமஸ்குரு
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே
ப்ரதி ஜானே ப்ரியோஸி மே ||
(18-65)

"என்னிடம் மனதை வைத்து என்னிடம் பக்தி பூண்டு என்னை ஆராதனை செய்வாயாக. என்னை வணங்கு. என்னையே அடைவாய். உனக்கு உறுதி கூறுகிறேன். எனக்குப் பிரியமானவன் நீ".

இறைவன் இந்த சுலோகத்தில் நமக்கு ஒரு வாக்குமூலம் அல்லது சத்தியபிரமாணம் அளிக்கிறுர். கீதையில் காணப்படும் சில முக்கியமான சுலோகங்களில் இதுவும் ஒன்றுகும். எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் என்பது வள்ளுவர் வாக்கு. ஒருவன் எதை இடைவிடாது எண்ணுகிறுனே அதுவாகவே ஆகிவிடுகிறுன். எண்ணத்தின் அதிசய ஆற்றல் அத்தகையது. குரங்காகத் தன்னை எண்ணுகிறவன் காலக்கிரமத்தில் அதாவது குரங்கின் தன்மையை அடையான். குரங்காவான். இறைவனைத் தன்னை எண்ணுகிறவன் இறைவனுகவே ஆகிவிடுவான். இது ஒரு அடிப்படை நியதி.

இறைவனது படைப்புக்கள் யாவும் அவனுக்குப் பிரியவானவைகளே. ஒரு தாயின் குழந்தைகள் பல நிறத்தில் இருந்தாலும், பல்வேறு பாங்குடையவர்களாக அமைந்தாலும் அந்தத் தாய் அத்தனைக் குழந்தைகளிடத்தும் ஒரே மாதிரி அன்பைச் செலுத்துவாள். அதுபோல தோன்றியவை அனைத்தும் இறைவனுடையவை. ஆடாகட்டும், மாடாகட்டும், பாம்பாகட்டும், மனிதனகட்டும் அனைத்தும் ஆண்டவனின் குழந்தைகள். அவனிடமிருந்து தோன்றியவை அனைத்தும் மீண்டும் அவனை அடைந்தாக வேண்டும். இதுதான் இயற்கையின் விதிமுறையாகும்.

இறைவனை அடைவதற்கான முதல் படி இறைவன்பால் மனதை லயிக்கச் செய்வதாகும். இறைவனிடம் தீராத பக்தி கொண்டு விளங்க வேண்டும். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க வேண்டும். தாயைப் பிரிந்த சேயைப் போல அவனுக்காக அழ வேண்டும். அழுது அழுது அவன் மயமாக வேண்டும். காணும் பொருள் அனைத்திலும் அவனையே காண வேண்டும். அதுவே உண்மையான உயர்ந்த வழிபாடாகும். புல், கல், புலி, எலி அனைத்தையும் அவன் மயமாகக் கண்டால் பிறகு அவனுக்கு அன்னியமாக எதுவும் நம் பார்வையில் படாது. இறைவனை நேசிப்பவர்கள் என்று தங்களைச் சொல்லிக் கொள்பவர்கள் இறைவனது உயிர்கள் அனைத்தையும் நேசிப்பவர்களாக ஆகிவிடுவார்கள். இறைவன் பெயரைச் சொல்லி அவர்கள் ஆட்டையும் மாட்டையும் கோழியையும் பலியிடமாட்டார்கள்.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.Sc., M.Phil.,
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

இறைவனிடம் மனதை வைத்து அவனிடம் ஆருத பக்தி கொண்டு, அவனையே யாண்டும் எதிலும் வழிபட்டு வருபவர்கள் இறுதியில் அவனையே அடைவார்கள். 'இது சத்தியம்' என்று பகவான் உறுதி அளிக்கிறுர். அதாவது இதில் எந்தவித ஐயத்திற்கும் இடமில்லை என்பது பொருள். நாம் நம் வாழ்வில் எதிலெல்லாமோ அன்பை வைக்கிறுேம்.

# டபீர் கணேசர்!

தஞ்சை மன்னனுக்கு அமைச்சராக இருந்த ராமச்சந்திர டபீருக்கு விநாயகரிடம் மிக்க ஈடுபாடு (இவர் பெயரில் கும்பகோணத்தில் ஒரு தெருவும் உள்ளது) தஞ்சை கருத்தாட்டாங்குடி (கரந்தை) செல்லும் மார்க்கத்தில் ஒரு சோலையின் நடுவிலே இவர் கணபதிக்கு ஆலயம் அமைத்தார். இக்கணபதிக்கு ஹேரம்ப விநாயகர் என்று பெயர். டபீர் கணேசர் என்றால் தான் எல்லோருக்கும் தெரியும்.

நன்றி: வினை தீர்க்கும் விநாயகர் - நூல்.

ஏமாற்ற மடைகிறோம். நாம் மிகவும் அன்பு பாராட்டியவர்கள் பிறிதொரு காலத்தில் நம்மால் மிகவும் வெறுக்கப்படுவார்களாக ஆகிவிடுகிறார்கள். மாற்றம் நம்மிடமோ அல்லது அவர்களிடமோ இருக்கலாம். எப்படியிருந்தபோதிலும் உலகியல் அன்பு சுயநலமானது. நிலையற்றது. போலியானது என்பதை நம் வாழ்வு நமக்கு ஓயாது புகட்டிக் கொண்டிருக்கிறது. ஆனால் இறையன்பு அத்தகையதன்று. கடலை அடையும் நதி கடல் மயமாக ஆவதுபோல இடையறாத ஆராதனையால் பகவானைப் போற்றும் பக்தன் பகவான் மயமாக ஆகிவிடுகிறான்.

பகவானை அடைய விரும்பும் பக்தன் என்ன செய்ய வேண்டும்? அடுத்த சுலோகத்தில் இதற்கான விடை வருகிறது. இது பகவத்கீதையின் மிக முக்கியமான சுலோகமாகக் கருதப்படுகிறது.

ஸர்வதர்மான் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ|
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மா சுச: || (18-66)

தர்மங்களையெல்லாம் அறவே தியாகம் செய்துவிட்டு என்னையே சரணடைவாயாக. பாபங்களனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன். வருந்தாதே".

இது கீதையின் சரமஸ்லோகமாக பக்தர்கள் பலராலும் பக்தியுடன் பாராயணம் செய்யப்படும் சுலோகமாகும். இந்த சுலோகத்துடன் கீதோபதேசம் முற்றுப் பெறுகிறது.

கடலிலிருந்து மேகமாக உருத்தாங்கி, மழையாக பொழிந்து, நதியாக மாறி இறுதியில் அந்த நதி கடலையே சென்றடைவது போல, ஒரு காலத்தில் இறைமயமாக இருந்த ஜீவன் இடையில் பல வடிவங்களையும் பல பெயர்களையும் தாங்கி, பிறப்பிறப்புச் சுழலில் சிக்கி, இறுதியில் இறைவனிடமே ஒன்றிக்க வேண்டும். இதுதான் நியதி. இந்த சுலோகம் ஜீவனது இறுதி முயற்சியாகிய 'சரணாகதி' என்னும் நிலையை விளக்கிப் பேசுகிறது.

'சரணாகதி' என்ற சொல்லிற்கு 'அடைக்கலம் புகுதல்' என்று பொருள் கொள்ளலாம். குழந்தை தாயிடம் எப்பொழுது அடைக்கலம் புகும்? தான்வேறு தாய்வேறு என்ற நிலைபோய், தாயுடன் ஒன்றிப்பதே. அதாவது தன்னால் செய்வதற்கு இனி ஒன்றுமில்லை என உணர்ந்து தாயிடம் தன்னைப் பரிபூரணமாக ஒப்படைப்பதுவே அதனது அடைக்கலம் அல்லது சரணாகதி நிலையாகும். தன்னால் முடியாது என்ற நிலையில் இறைவனிடம் சரணடைவது என்பது சரணாகதியின் ஒரு நிலை. யான் எனது என்னும் செருக்கு அறவே அகன்று எல்லாம் அவனே என்ற சுயநலம் சிறிதும் அற்றநிலை. நதி கடலில் சங்கமமாவது போல ஜீவன் பகவானிடம் சங்கமமாவது சரணாகதியின் பிறிதொரு நிலை, இறைவனது செயல் கடலின் செயலைப் போன்றது. ஜீவனின் செயல் அலையின் செயலைப் போன்றது. அலை கடலிற்கு அன்னியமானது அல்ல. அலை அடிக்கையில் அது அலைபோலக் காட்சிதரும். அதற்கு முன்னும் பின்னும் அது கடல் மயமே.

அதுபோல இறைமயமாய் இருந்த ஜீவன் ஒரு சிறிது காலத்திற்கு ஜீவ நிலையில் இருப்பதுபோலத் தென்பட்டாலும் இறுதியில் இறைவனிடமே ஒடுங்கியாக வேண்டும். அதற்கு ஜீவன் செய்ய வேண்டிய செயல் எது என்று பகவான் இந்த சுலோகத்தில் விளக்குகிறார்.

'ஸர்வ தர்மான் பரித்யஜ்ய' 'அனைத்துத் தர்மங்களையும் த்யாகம் செய்துவிட்டு' என்றால் என்ன பொருள்! இதற்கு ஆச்சாரியர்கள் பலவிதங்களில் விளக்கங்கள் கொடுத்திருக்கிறார்கள். த்வைத, விசிஷ்டாத்வைத, அத்வைத என்று பல்வகை விளக்கங்கள் தரப்பட்டிருக்கின்றன. 'தர்மம்' என்ற வார்த்தையும் ஆழமான கருத்துடையதாகும். அதை ஒரே வார்த்தையில் தமிழில் மொழி பெயர்த்துவிட முடியாது. நம் ஒவ்வொருவருக்கும், நிறையக் கடமைகள் வந்து வாய்த்திருக்கின்றன. 'அனைத்துக் கடமைகளையும், இவற்றை நான் செய்யவில்லை. என்னுள் உறையும் இறைவனே செய்விக்கிறான் என்ற எண்ணத்துடன் இறைவன்பால் அறவே தியாகம் செய்துவிட்டு' என்றும் இதற்குப் பொருள் கொள்ளலாம்.

தன்னைப் பரிபூரணமாகப் பகவானிடம் ஒப்படைத்துவிட்டபின் தான் செய்யும் செயல்கள் அனைத்தையும் செய்விப்பவன் அவன் என்ற உயர் நிலையைப் பக்தன் அடைகிறான்.

(தொடரும்)

# காயத்ரீ-வேதங்களின் மாதா

திருமதி. N. ஜெயா, B.SC.,
ஒரத்தநாடு

காயத்ரீ உலகத்திற்குக் காரண மான பராசக்தி.

"ஸந்த்யா ஸ்ா ஜகத்ஸூதி: மாயாதீதா து நிஷ்கலா
ஐச்வரீ கேவலா சக்தி: தத்வத்ரய ஸமுத்பவா"

என்று ஸ்ம்ருதியில் ஸத்வரஜஸ்தமஸ் என்ற முக்குண காரணமாயும் ஈஸ் வரனின் சக்தியாயும் வர்ணிக்கப்பட் டிருக்கிறது.

மூவர்ணத்தார்களுக்கு த்விஜர் என்று பெயர். த்விஜர் என்றால் இரு பிறப்புள்ளவர் என அர்த்தம். முதல் பிறப்பு தாய். தந்தையிடமிருந்து, இரண்டாவது பிறப்பு பூணல்போடும் ஸமயம் காயத்ரீ உபதேசத்தால் உண் டாகிறது. அதில் தாய், காயத்ரீ; தந்தை, உபதேசிக்கும் ஆசிரியர்.

"தத்ராஸ்ய மாதா ஸாவித்ரீ பிதா த்வாசார்ய உத்யதே"

ஆகையால் தாயைப்போல் நினைக்க வேண்டும். அதை விடுவதால் தாயை தியாகம் செய்த தோஷம் ஏற்படும்.

காயத்ரீ மூன்று வேதங்களின் ஸாரம்.

"த்ரிப்ய ஏவது வேதேப்ய: பாதம் பாத மதூது ஹத்"

என்றார் மனு.

மேலும் வேதத்தின் ஸாரத்தைக் காண எண்ணினார் பிரும்மதேவன். ருக்வேதத்திலிருந்து பூ: என்பதும், யஜுஸ்ஸிலிருந்து புவ: என்பதும், ஸாமத்திலிருந்து ஸுவ: என்பதும் வெளியானது என்று ஸாமவேதம் கூறுகிறது. வேதங்களில் மிக ஸாரம் எது என்று மறுபடி ஆராய்ந்தார். ப்ரணவம் என்ற ஓங்காரம் உண் டானது.

"அகாரம் சாப்யுகாரம் ச மகாரம் ச ப்ரஜாபதி: |
வேதத்ரயாத் நிரதுஹத் பூர்புவஸ் ஸ்வரிதிதி ச" ||

ப்ரணவம், வ்யாஹ்ருதிகள், காயத்ரீ என்ற மூன்றும் பிரம்மோபதேச காலத்தில் உபதேசிக்கப்படுகின்றன.

இதை உபதேசம் பெற்ற பிறகே மற்ற வைதீக கார்யங்களுக்கு அதி காரம் ஏற்படுகிறது. ஆகையினால் காயத்ரீ ஜபம் செய்யாமல் மற்ற எந்த ஜபம், பூஜை, ஆராதனம், பாராயணம் முதலியன செய்தாலும் பயன் பெறுவதில்லை.

இந்த மந்திரத்தை ப்ரணவம், வ்யாஹ்ருதி, காயத்ரியை எட்டு அக்ஷ ரங்களாக, மூன்றாகப் பிரித்து ஆக ஐந்து பதமாய் ஜபம் செய்ய வேண் டும். மஹாபாபங்களையும் நீக்கும். ஒரே பதமாய் சேர்த்து ஜபிப்பது தவறு; பாபத்திற்கும் காரணமாகும்.

## அர்த்தம்:

எல்லா பிராணிகளின் ஹ்ருதயத் தில் ஸாக்ஷியாய் அந்தர்யாமியாய் இருந்து கொண்டு புத்தியை ப்ரேர ணம் செய்பவளும் ஸூர்ய மண்டலத் தில் இருந்து கொண்டு உலகத்திற்கு வெளிச்சம் கொடுப்பதால் எல்லோ ரும் ஸேவிக்க வேண்டியவளாயும் விளங்குகின்ற காயத்ரியை தியானம் செய்கிறேன். ஜபம் செய்பவனை அன்ன தோஷம் ப்ரதிக்ரஹ தோஷம் மற்றுமுள்ள பாபங்கள் இவைகளி லிருந்து காப்பாற்றுகிறது. ஆகை யினால் காயத்ரீ என்று பெயர்.

"காயந்தம் த்ராயதே யஸ்மாத் காயத்ரீ ப்ரோச்யதே புதை:"

காயத்ரீ தேவிக்கு ஐந்து முகங்கள், பத்து கைகள், ஒவ்வொரு முகங்களி லும் மூன்று கண்கள். சந்திரகலை தரிக் கிறாள்.

## காயத்ரீ ஜபத்தின் பயன்:

முன் காலத்தில் ரிஷிகள் காயத் ரியை அதிக ஆவ்ருத்தி செய்து உபா ஸித்ததால் தீர்க்காயுள், நல்ல புத்தி விலாஸம், நற்புகழ், அழகான உருவம், இந்திரிய முக்தியை அடைந்தனர்.

"ரிஷயோ தீர்க்கஸந்த்யத்வாத் தீர்க மாயு ரவாப்நுயு:"
ப்ரக்ஞாம் யசச்ச கீர்த்திம் ச ப்ரஹ்ம வர்ச்சஸமேவச"

## காயத்ரியின் பெருமை:

ஒரு ஸமயம் பதினைந்து வருஷ காலம் மழையில்லாமல் துர்பிக்ஷம் ஏற்பட்டது. ஆஹாரம் ஜலமில்லா மல் ஜனங்கள் பலவிதமாகத் துன் புறுத்தப்பட்டு ஆயிரக்கணக்கான குடும்பங்கள் கௌதமர் ஆச்ரமம் வந் தன. அவர் காயத்ரியின் ஸன்னதியில் சென்று வந்தவர்களை ஆராதிக்கப் பொருளைப் பிரார்த்தித்தார். அம்பாள் ஆவிர்பவித்து பூர்ண பாத்ரம் கொடுத்தாள். அதிலிருந்து அன்னம், பால், தயிர், நெய், தான் யங்கள், புல், காய் கிழங்குகள் எல் லாம் எல்லையின்றி உண்டாயின. அத னால் வந்த மனிதர், பசுக்கள், குழந் தைகள் எல்லோருக்கும் விருந்து அளித்தார். எல்லோரும் மகிழ்ந் தனர் என்று தேவீ பாகவதம் கூறு கிறது.

மேலும் தேவீ பாகவதம் 12-ம் ஸ்கந்தம் காயத்ரீஹ்ருதயம், கவசம், ஸஹஸ்ரநாமம், தத்வம், அக்ஷரரிஷி சந்தஸ், தேவதை, தீக்ஷாவிதி முத லியவற்றை விசதமாய் கூறுகிறது.

மஹாபாரதம் அனுசாஸனபர்வம் 255வது அத்தியாயத்தில் ஸ்ரீகிருஷ்ண பகவான் தர்மபுத்திராதிகள் மற்றும்

# துர்வாச கணபதி

தஞ்சை மாவட்டம் திருக்கோடிக்காவலில் துர்வாச கணபதி கோயில் கொண்டிருக்கிருர். துர்வாச மகரிஷியின் தியானத்தைக் கலேத்த தற்குப் பிராய்ச்சித்தமாக திரிகோடி மந்திரங்களில் தேவதைகளேப் பிர திஷ்டை செய்த கணபதி இவர். மிகச் சிறிய உருவம்.

கதிராமங்கலத்திற்கருகில் குண தலேப்பாடி என்ற கிராமத்தில் துர்வாசர் பிரதிஷ்டை செய்த பிள்ளேயார் இருக்கிருர், என்ன காரணத் திளுலோ வெல்லப் பிள்ளேயார் என்றழைக்கிருர்கள்.

தமிழ் மக்கள் அனேவருக்கும் விநாயகரிடம் ஈடுபாடு உண்டு. இவ் ஈடுபாடு நகரத்தார்களிடம் சிறப்பாகக் காணப்படுகிறது. 'பிள்ளேயார் பட்டி' என்ற கோயிற் பிரிவு (கோத்திரப் பிரிவு) பல நூற்ருண்டுகளுக்கு முன் நகரத்தார்க்குள் இருப்பதாலும், 'மரகத விநாயகர்' இருந்தாக வரலாற்றுச் செய்திகள் கூறுவதாலும் இது தெரிய வருகிறது.

நகரத்தார்கள் கட்டியுள்ள விநாயகர் கோவில்களின் எண்ணிக்கை ஓராயிரத்துக்கும் மேற்பட்டது.

# வலம்சுழி வெள்ளே விநாயகர்

சுவாமி மலேக்கருகிலுள்ள திருவலஞ்சுழியின் மிக முக்கியமான மூர்த்தி விநாயகர்தான். உருவம் மிகச் சிறியது. வெள்ளேநிறம், கை யிளுல் தொடப்படாதவர். பச்சை கற்பூரத்தால் தான் இவருக்கு அபி ஷேகம். பாற்கடல் கடையுமுன் வழிபடப்பட்டமூர்த்தி என்று புராணம் கூறுகிறது. உற்சவமூர்த்திக்குப் பக்கத்தில் வாணி, கமலா என்று இரு தேவிமார்கள் இருக்கின்றனர். துதிக்கை வலமாக சுருண்டிருப்பதிஞ லேயே வலம்சுழி என்று இத்தலத்திற்குப் பெயர் ஏற்பட்டுள்ளது.

# விளேயாடும் விநாயகர்

விநாயகரைத் தவழும் கிருஷ்ணனேப்போல எண்ணிப் பார்த்த சிற்பி ஒருவர் பால கணபதியையும் சிருஷ்டித்திருக்கிருர். தும்பிக்கை யில் கொழுக்கட்டையுடன் தவழும் கணபதி பின்ஞல் என்ன நடக்கிறது என்று திரும்பிப் பார்க்கும் தோரணேயில் ஒரு சிற்பம் வேலூர் ஜலகண் டேசுவரர் கோவிலில் காணப்படுகிறது. சிதம்பரம் ஆயிரக்கால் மண் டபத்தில் இரு கைகளுடன் வெண்ணேப் பாத்திரத்தை வைத்துக் கொண்டு தவழும் பால கணபதியின் உருவச்சிலே இருக்கிறது.

நாகலாபுரம் வேதநாரயணர் கோவிலுள் பிரவேசித்ததும் ஒரு புறம் கணேசரும் மற்றொரு புறம் துர்க்கையும் காணப்படுகிருர்கள். நாமம் தரித்துத் தும்பிக்கை ஆழ்வாராகக் கணபதி நின்ற கோலத்தில் காட்சி தருகிருர்.

பாண தீர்த்தம் அருகில் கணபதி சித்தி புத்தி சகிதம் மரத்தடி யில் இருக்கிருர். பழநியாண்டவர் போல் இவருக்கு விபூதி அபிஷேகம் செய்யப்படுகிறது. மதுரை பொற்ருமரைக் குளக்கரையிலும் விபூதி விநாயகர் இருக்கிருர்.

நன்றி: வினே தீர்க்கும் விநாயகர் - நஜன்.

ரிஷிகணங்கள் ஸந்நிதியில் பீஷ்மாச் சாரியர் காயத்ரீ மஹிமையைக் கூறு கிருர். காயத்ரீ மந்திரத்தை ச்ரத் தையுடன் ஜபம் செய்தால் சிறந்த ஸித்திகளே அடையலாம். ராஜபயம், ஸாப்பயம், பிசாசராக்ஷஸ பயம், புயல் மூதலிய பயங்கள் நீங்குகின்றன.

காயத்ரீ மந்த்ரத்தின் பொருள் என்னவென்ருல் "நமது புத்தியை இயங்கச் செய்யும் சூர்யநாரா யணனே நாம் வணங்குவோம்" என்ப தாகும்.

காலேயில் ஜபிக்கப்படும்பொழுது காயத்ரீ என்றும், பகலில் ஜபிக்கப் படும்பொழுது சாவித்ரி என்றும், மாலேயில் ஜபிக்கப்படும்பொழுது சரஸ்வதி என்றும் இந்த ஒரே மந்த் ரம் பல்வேறு பெயர்களேப் பெறு கிறது.

"காயத்ரீ பரமோ மந்த்ர: நமாதுர்
தைவதம் பரம்"

என்பது சாஸ்திர வசனம். காயத் ரீயைவிட சிறந்த மந்த்ரம் கிடை யாது. தாயைவிட சிறந்த தெய்வம் இல்லே என்பது இதன் பொருள்.

"ந தத்ர ம்ரியதே பால: காயத்ரீ
யத்ர ஜப்யதே"

என்பது மஹான்கள் வாக்கு. காய த்ரீ மந்த்ரம் பெரியோர்களால் முறைப்படி அனுஷ்டிக்கப்படும் ஊரில் குழந்தைகள் அகால மரண மாக இறப்பதில்லே என்பது இதனுல் தெரியவருகிறது.

வேதமாதாவான காயத்ரீதேவியை நாமும் வேண்டி நம் ஹிந்து மதமும், ஸனுதன தர்மமும், ஆஸ்திகமும் என்றும் தழைத்திருக்க வழி செய்வோ மாகுக.



# ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம்

अवनीतनयाकमनीयकरं रजनीकरचारुमुखाम्बुरुहम् ।
रजनीचरराजतमोमिहिरं महनीयमहं रघुराममये ।।

அவநீ தநயா கமநீயகரம்
ரஜநீ கர சாரு முகாம்புருஹம் |
ரஜநீ சர ராஜ தமோ மிஹிரம்
மஹநீயமஹம் ரகுராம மயே ||

பதவுரை :—அவநீ தநயா கமநீய கரம்=பூமி தேவியின் திருமகள் (ஸீதை) விரும்பி(ப்பற்றி)ய திருக்கையை யுடையவனும்; ரஜநீகர சாரு முக அம்புருஹம்=சந்திரன் போன்ற அழகிய திருமுக மண்டலமாகிய தாமரை மலரை யுடையவனும்; ரஜநீ சர ராஜ தமோ மிஹிரம்=ராக்ஷஸர் தலைவ (ராவண) னென்னும் இருட்டிற்குச் சூரியனும்; மஹநீயம்=கொண்டாடத் தக்கவனுமான; ரகு ராமம்=ஸ்ரீ ராமனை: அஹம்=நான்; அயே=(சரண மாக) அடைகிறேன்.

கருத்துரை :—உன்னைப் பிரியமாட்டாது உன் னுடன் அவதரித்த பிராட்டியைப் பறிகொடுப்பதற் கும் பின்வாங்காது, தவறிழைத்த ராவணனைக் கொன்று சரணம்புகுந்த தேவர்களின் விருப்பத்தை நிறைவேற்றினாய். சரணாகத ரக்ஷகனாகிய உன்னை உலகோர் கொண்டாடுகின்றனர். ஆதலின் அடி யேனும் சரணமாக அடைகிறேன்.

குறிப்பு :—ராஜநீ சரர் இரவில் திரிபவர்கள். இராக்கதர்கள். ரஜநீ கர சாரு முகாம்புருஹம்- கஷ்டம் வந்தபோதும் இயற்கை யழகும் உயர்வும் மாறாது இருந்தவன்.

सुमुखं सुहृदं सुलभं सुखदं स्वनुजं च सुकायममोघशरम् ।
अपहाय रघूद्वहमन्यमहं न कथञ्चन कञ्चन जातुभजे ।।

ஸுமுகம் ஸுஹ்ருதம் ஸுலபம் ஸுகதம்
ஸ்வநுஜஞ்ச ஸுகாய மமோகசரம |
அபஹாய ரகூத்வஹ மந்ய மஹம்
ந கதஞ்சந கஞ்சந ஜாது பஜே ||

பதவுரை :— ஸுமுகம் = அழகிய திருமுக மண்டல முடையவனும்; ஸுஹ்ருதம் = நல்ல மன துடையவனும் (தோழனும்); ஸுலபம் = (அடி யார்க்கு) எளியவனும்; ஸுகதம் = (மோக்ஷம் முத லிய) ஸுகங்களைக் கொடுப்பவனும்; ஸுஅநுஜம் = ஒத்த தம்பிகளை உடையவனும்; ஸுகாயம் = அழகிய திருமேனி உடையவனும்; அமோக சரம் ச = வீணாகாத பாணங்களை உடையவனும் ஆன; ரகு உத்வஹம் = ரகு குலத் தலைவனை! அபஹாய = விட்டு; அந்யம்கம் சந = வேறு ஒருவனை; ஜாது = ஒரு பொழுதும்; கதம் சந = எவ்வகையினும்; அஹம் = நான்; ந பஜே = (சரணமாய்) அடைய மாட்டேன்.

கருத்துரை :— உதார மனத்தினனாகவும் அடி யார்க்கெளியவனாகவும், ஆண்மையும், வீரமும் பொருந்தியவனாகவும், தானொருவன் போதாதென்று தம்பிகளுடன் அவதரித்து அடியார் வேண்டிய எல்லா இன்பங்களேயும் அளித்த ஸ்ரீராமன் நீயே. ஆதலின் உன்னையன்றி ஒருவனையும் அணுகேன்.

विना वेङ्कटेशं न नाथो न नाथः
सदा वेङ्कटेशं स्मरामि स्मरामि ।
हरे वेङ्कटेश प्रसीद प्रसीद
प्रियं वेङ्कटेश प्रयच्छ प्रयच्छ ।।

விநா வேங்கடேசம் ந நாதோ ந நாத:
ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி |
ஹரே வேங்கடேச ப்ரஸீத ப்ரஸீத
ப்ரியம் வேங்கடேச ப்ரயச்ச ப்ரயச்ச ||

பதவுரை :— வேங்கடேசம் விநா = திருவேங் கட முடையான் தவிர; நாத: ந = (வேறு) இறை வன் இல்லை; (ஆதலின்); வேங்கடேசம் = திருவேங் கடமுடையானை; ஸதா = எப்பொழுதும்; ஸ்ம ராமி = த்யானிக்கிறேன்; ஸ்மராமி = த்யானிக்கி றேன்; ஹரே = ஸ்ரீ ஹரியே! வேங்கடேச = வேங் கடவனே! ப்ரஸீத = அருள் புரி; ப்ரஸீத = அருள் புரி; வேங்கடேச = வேங்கடவனே! ப்ரியம்=(நான்) விரும்பும் பயனை; ப்ரயச்ச = அளித்தருள்; ப்ர யச்ச = அளித்தருள்.

கருத்துரை :— உன்னைத் தவிர்த்து வேறு இறைவன் உளன் என்று நான் கனவிலும் கருத வில்லையாதலின் எப்பொழுதும் உன்னையே த்யானித் துக் கொண்டிருக்கிறேன். அருள் செய்து நான் விரும்பியதை அல்லது எனக்கு நல்லது என்று உனக் குத் தோன்றியதைக் கொடுத்தருள்.

अहं दूरतस्ते पदाम्भोजयुग्म-
प्रणामेच्छयाऽऽगत्य सेवां करोमि ।
सकृत्सेवया नित्यसेवाफलं त्वं
प्रयच्छ प्रयच्छ प्रभो वेङ्कटेश ।।

அஹம் தூரதஸ்தே பதாம்போஜயுக்ம
ப்ரணமேச்சயாகத்ய ஸேவாம் கரோமி |
ஸக்ருத்ஸேவயா நித்ய ஸேவாபலம் த்வம்
ப்ரயச்ச ப்ரயச்ச ப்ரபோ வேங்கடேச ||

பதவுரை :— அஹம் = நான்; தே = உன்னுடைய; பத அம்போஜ யுக்ம ப்ரணம இச்சயா = திருவடித் தாமரைகள் இரண்டையும் வணங்க வேண்டுமென்று விரும்பி(யதனுல்); தூரத: = வெகு தூரத்திலிருந்து; ஆகத்ய = வந்து; ஸேவாம் = தரிசனம்(தொண்டு) கரோமி = செய்கிறேன்; ஸக்ருத் = ஒருமுறை; ஸேவயா = தரிசனத்தாலேயே; நித்ய ஸேவா பலம் = தினந்தோறும் தொண்டு செய்வதாம் வீடு என்னும் பலத்தை; வேங்கடேச = ஸ்ரீனிவாஸ! ப்ரபோ = ப்ரபுவே! த்வம் = நீ; ப்ரயச்ச = கொடுத்தருள்; ப்ரயச்ச = கொடுத்தருள்.

கருத்துரை :— நான் வெகு தூரத்தினின்றும் வந்து உன்னை ஒருமுறை வணங்கித் தொண்டு புரிந்தேன். (பிறவிக்கடலில் தத்தளிக்கும் நான் பாபங்களாகிற அலைகளால் இழுக்கப்பட்டு) உன்னை (கரையை) விட்டுவிலகி வெகு தூரம் சென்று விட்டேன். புண்ணியங்களாகிற அலைகள் என்னை உன்னிடம் கொண்டு சேர்த்திருக்கின்றன. ஒருமுறை வணங்கினேன். நித்தியம் தொண்டு செய்து களித்திருத்தல் என்னும் முக்தி ஸாம்ராஜ்யத்தை எனக்குக் கொடுத்தருளுக.

अज्ञानिना मया दोषानशेषान् विहितान् हरे ।
क्षमस्व त्वं क्षमस्व त्वं शेषशैलशिखामणे ।।

அஜ்ஞாநிநா மயா தோஷா-
நசேஷாந் விஹிதாந் ஹரே |
க்ஷமஸ்வ த்வம் க்ஷமஸ்வ த்வம்
சேஷசைல சிகாமணே ||

பதவுரை :— சேஷ சைல சிகாமணே! = திருவேங்கட மலைக்கு(தலை) ஆபரணமானவனே! ஹரே = ஸ்ரீ ஹரியே! அஜ்ஞாநிநா = அறிவில்லாத; மயா = என்னுல்; விஹிதாந் = செய்யப்பட்ட அசேஷாந் = எல்லா; தோஷாந் = அபசாரங்களையும்; த்வம் = நீ; க்ஷமஸ்வ = பொறுத்தருள்; த்வம் = நீ; க்ஷமஸ்வ = பொறுத்தருள்.

கருத்துரை :— அறியாது நான் செய்த குற்றங்களைப் பொறுத்தருளவேண்டும். இன்றேல் ஹரி என்ற உன் பெயரும் அர்த்தமில்லாது போம். பரமபதத்தை விட்டு நீ திருமலைக்கு எழுந்தருளியதும் வீணும். ஆதலின் பொறுத்தருள வேண்டும்.

ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம் முற்றிற்று.

---

# கும்பாசி கணபதி

கேரளாவில் ஹரிஹர க்ஷேத்திரம் கும்பாசி என்ற பெயரில் உள்ளது. அங்கு ஒரு குன்றின் மீது கணபதி கோயில் கொண்டிருக்கிருர். இக்குன்றை "ஆனகுட்டே" என்று அழைக்கிருர்கள். இவர் பாண்டவர்களில் ஒருவனுன பீமனுல் வழிபடப்பட்டவர். உருவமும் பெரிய உருவம். இவர் அனுக்கிரகத்தினுல்தான் பீமன் யானை பலம் பெற்றுனும். இங்குள்ள பெரிய ஹோம குண்டத்தில் கணபதிஹோமம் செய்வது மிக விசேஷம்.

மலையாளப் பகுதியில் 'கணபதி வட்டம்' என்ற ஒரு பகுதி உண்டு. திப்புசுல்தான் படையெடுத்து வந்தபோது இந்த வட்டத்திலிருந்த விநாயகர் ஆலயத்தை இடித்து விக்கிரகத்தையும் பின்னப்படுத்தினுன். திப்பு பின்னர் தவறை உணர்ந்து அக்கோயிலுக்குப் பொன்னையும் பூமியையும் தானம் செய்தான். அந்த விநாயகரையே இன்னும் அங்குள்ள மக்கள் வழிபட்டு வருகிருர்கள்.

# கையொடிந்த கணபதி

சிதம்பரத்தில் செங்கழுநீர் பிள்ளையாருக்கு ஒரு சந்நிதியுள்ளது. திப்புசுல்தான் காலத்தில் முகமதியர்கள் இவரது கையை உடைத்து விட்டார்கள். ஊர் மக்கள் இவ்வுருவத்தை அகற்றிவிட்டு வேறு பிள்ளையாரை வைக்க முயன்றனர். பிள்ளையார் அவர்கள் கனவில் தோன்றி 'கையொடிந்த உன் மகனை நீக்கி விடுவாயோ?' என்று கேட்டாராம். மக்கள் தங்கள் தவறை உணர்ந்து கையொடிந்த பிள்ளையாரையே வைத்து வழிபட்டு வருகின்றனர்.

இக்கோவில் வேடன் பிள்ளையார் கோலுவிக்கு மேற்கே உள்ளது. மனித முகத்துடன் இருக்கும் நரமுகப் பிள்ளையாரை சிதம்பரம் தெற்கு வீதியில் தரிசிக்கலாம்.

சிதம்பரம் கோயில் வெளிப்பிராகாரத்தில் தென்மேற்கு மூலையில் முக்குறுணு விநாயகர் ஆலயம் உள்ளது. விநாயகர் உருவம் மிக அழகானது, எட்டடி உயரம் உள்ளது. நன்றி: நஜன்.

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

பார்த்தாலும் பனிப்பொழிவுதான். அந்த உறைபனிக்குள்ளேயே மூர்த்தியும் கோயிலும் புதைந்து கிடக்கும். பனி உருகி ஆறுக ஓடும் வேனிற் காலமே சிறந்த காலமாகும். அதிலும் ஆகஸ்ட் மாதமே மிகச் சிறந்தது.'

'சரி ஜி... எப்படி பிரயாணம் செய்வது? அதைச் சொல்லுங்க...'

'முதலில் காஷ்மீரத்திற்கு வந்துவிட வேண்டும், டில்லி வழியாக. ஸ்ரீ நகரிலிருந்து 60 மைல் தூரத்தில் உள்ள பால்காம் சென்றுவிட வேண்டும். பால்காமில் இருந்து நான்கு நாள் பயணம்தான் அமரநாதத்திற்கு.

'ஜி! அந்த நான்கு நாட்களுக்கு பஸ்ஸிலோ, ரயிலிலோ போகலாமா..'

'நாராயணு நாராயணு!... பஸ்ஸும் போகாது, ரயிலும் போகாது, சைக்கிளும் போகாது. நடந்துதான் போகனும்.'

'அப்படியாஜி! கால் வலிக்குமே' என்று வருத்தப்பட்டனர் குழந்தைகள்.

'அதுதான் இல்லே. விரும்பினுல் குதிரைகள், பல்லக்குகள், டோலிகள் இவற்றின் மேலேயும் ஏறிச் செல்லலாம். பால்காமிலிருந்து 30 மைல் தான் இருந்தாலும் மூன்று நான்கு இடங்களில் தங்கித்தான் பயணம் செய்ய வேண்டி இருக்கும். விட்டா நாலா என்னும் ஆற்றை ஒட்டியே தான் அதன் பாதை உள்ளது. வழி நெடுக 'பைன்' மரங்கள்தான். வழி நெடுக விட்டாநாலா ஆறு குதித்தும் வளைந்தும் நெளிந்தும் பெரும் பெரும் பாறைகளின் வழியே வழிந்தோடுவதைப் பார்க்க கண்கள் ஆயிரம் வேண்டும்... அவ்வளவு கொள்ளை அழகு.'

'ஒரு நாளில் எத்தனை மைல் நடக்கலாம், ஜி...'

'ஒன்பது மைல்தான். மாலை வந்துவிடும். 'சந்தன் வாசி' என்னுமிடத்தில் தங்கிவிட வேண்டும். வசதியாகத் தங்க 'காஷ்மீர் அரசு' சிறப்பாக ஏற்பாடு செய்து இருக்கின்றனர். கண்ணுக் கெட்டிய தூரம் வரை பசுஞ்சோலைகள்தான், அங்கே.'

'மறுநாள் பசுஞ்சாலையில் நடக்க வேண்டுமோ?'

'அதுதான் இல்லே. செங்குத்தான மலைமீது ஏற வேண்டும், ஒருவர்பின் ஒருவராகத்தான். குளிர் என்ருல் குளிர், அப்பேற்பட்ட குளிர். எந்த ஒரு பறவையும் அங்கே வாழ முடியாது. இப்படி எட்டு மைல்கள்... நடக்கனும். 'சேஷநாக்' என்ற இடம் வரும்.' என்றதும் - உடனே உமா கேட்டாள்.

'அங்கே ஒரு நாள் தங்கவேண்டுமா ஜி...' என்று.

'ஆமாம். "வௌஜான்" என்ற அழகான தடாகத்தைப் பார்க்கலாம். மறுநாள்... இதையும் கடந்து செல்லும்போதுதான் முக்கால் மைல் தூரம் மலை உச்சியில் செங்குத்தாய் ஏற வேண்டும். வழி எல்லாம் முட்புதர்கள். மனசை தளர விடாம ஏறனும். 'வாட்ஜகான்' என்ற மகிழ்ச்சியைத் தரும் இடம் வரும்.'

'மலை உச்சியென்ருல் கடல் மட்டத்திலிருந்து எவ்வளவு உயரம் தாத்தா'-வினவினுன் சுவாமிநாதன்.

'கடல் மட்டத்திற்கு மேல் 11500 அடி.'

'அடி அம்மாடி...' என்று ஆச்சரியப்பட்டாள் வசந்த லட்சுமி.

'ஆமாம். இங்கிருந்து பாதை இறங்கிச் செல்லும். அங்கே ஐந்து நீர் ஊற்றுகள் பெருக்கெடுத்தோடும். 'பஞ்ச தரணி' என்பார்கள் அந்த இடத்தை.'

'அங்கு ஒரு நாள் கழிக்க வேண்டுமா?' என வினவினுள் ஜெயலட்சுமி.

'ஆமாம். அமரநாத் குகையை நோக்கிச் செல்லும் வழியில் உள்ள

## ஏழு வகையான நீராட்டம்

(1) वारुण स्नानम् (வாருண ஸ்நாநம்) :— நதிகள், தடாகங்கள் இவைகளில் நீராடுவது.

(2) दिव्य स्नानम् (திவ்ய ஸ்நாநம்) :— வெய்யில் இருக்கும் நிலையில் மழை பெய்தால் அம்மழையில் உடலை நனைப்பது.

(3) आग्नेय स्नानम् (ஆக்னேய ஸ்நாநம்) :— பஸ்மங்களை உடலில் பூசிக்கொள்வது.

(4) वायव्य स्नानम् (வாயவ்ய ஸ்நானம்) :— பசுக்கள் நடந்து செல்லும்போது எழும் அதன் பாத தூள்கள் காற்றின் மூலமாக நம் உடலில் படும்படிச் செய்வது.

(5) पार्थिव स्नानम् (பார்த்திவ ஸ்நாநம்) :— திருமண் முதலியவைகளைத் தரித்துக்கொள்வது.

(6) मान्त्र स्नानम् (மாந்த்ர ஸ்நாநம்) :— வேத விஹிதமான மந்திரங்களைச் சொல்லி உடலில் தீர்த்தத்தை ப்ரோக்ஷணம் செய்வது. (தெளித்துக் கொள்ளுதல்).

(7) मानस स्नानम (மானஸ ஸ்நாநம்) :— பகவானை மனதில் தியானம் செய்துகொண்டு, அவனது திருவடித்தாமரைகளிலிருந்து உண்டான கங்கா ஜலத்தை தனது சிரஸில் (தலையில்) விழுமாறு சிந்திப்பது.

— பாதூர் — புராணம் ரங்கராஜாச்சாரியார். திருப்பதி.

ஆறுகளில் எல்லாம் பனி உறைந்து கிடக்கும் வெள்ளை வெளேரென்று. யாத்ரீகர் கூட்டம் எல்லாம் வைக்கோல் பிரிகளைத் தம்தம் கால்களில் சுற்றிக் கொண்டே நடக்க வேண்டியிருக்கும். பஞ்சதரணி ஆற்றின் வடபுறத்தில் ஒரு செங்குத்தான மலை. அதற்கு வடக்கேதான் அமராவதி ஆறு. இந்த இரண்டையும் கடந்தால்தான் அமராவதி ஆற்றின் கிழக்கே ஒரு மைல் தூரத்தில் ஆற்றின் வடகரையில் உள்ள குகையில்தான் அமரநாதர் தரிசனம் தருகிறார்.'

'அப்பாடா. எத்தனையோ சிரமங்கள், எவ்வளவோ கஷ்டங்கள்...வந்து சேர்ந்து விட்டோம் அமரநாத் குகைக்கு,'-என்றான் இராமலிங்கம்.

'அமரநாத் கீ ஜெய்' என்று பக்தர்கள் முழங்கும் முழக்கத்தில் நாமும் முழங்கிக் கொண்டு அமரநாத் குகைக்குள் வரலாம்.'

'குகை எப்படி?'

'அமரநாத் குகை பெரிய குகைதான். 150 அடி நீளம், அகலம், உயரம் எல்லாம். ஒரு அதிசயம் தெரியுமா.'

'என்ன தாத்தா அது?' - என்றனர் அனைவரும்.

'குகையின் பின் பாகத்தில் உள்ள பாறையின் நடுவில் அமைந்து உள்ள திருஉருவம்தான் சிவலிங்கம். அமரநாதர், குகையின் மேற்கூரையிலிருந்து சதா சர்வகாலம் தண்ணீர் கொட்டிக் கொண்டே இருக்கிறது. அந்த சிவலிங்கம்தான் முழுக்க முழுக்க பனிக்கட்டி உருவம் பெற்றவர். 'அடுத்து இன்னொரு அதிசயம் தெரியுமோ?'

'அது என்ன...ஜி!'

'மற்ற சிலை உருவ சிவலிங்கம் போல எப்பொழுதும் இருக்க மாட்டார். ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று சுய உருவம் பெறுவார். வளர்பிறை சந்திரன்போல தினமும் வளர்ந்து கொண்டே வருவார். முழு நிலவான பௌர்ணமியன்று பூரணப் பொலிவுடன் முழு உருவம் பெற்று நன்றாக சிவலிங்க வடிவில் தோன்றுவார். பௌர்ணமிக்கு மறுநாள் தேய்பிறைதானே. நிலா தேய்வது போல நாளுக்கு நாள் பனிக்கட்டி வடிவம் தானாகவே சிறிது சிறிதாய் குறையத் தொடங்கிவிடும். அமாவாசைக்கு முந்திய தினமே கொஞ்சங்கூட இல்லாமல் முழுதும் தேய்ந்து மறைந்து விடுவார். மீண்டும் அமாவாசைக்கு அடுத்த நாள் முதல் வளரத் தொடங்கி விடுவார்...' என்றார் பெரிய திருவடி.

'அட... ஆச்சரியமாய் இருக்கிறதே... வளர்பிறைபோல வளரது... தேய்பிறை போல தேயுதே.'-என்று ஆச்சரிப்பட்டனர்.

'சைவ சிந்தாந்தம்-என்ன சொல்கிறது தெரியுமா? கடவுள் உருவம்-அருவம் - அருவுருவம் உடையவர் என்று சொல்கிறது. அது அங்குதான் பொருந்தும். நாம் எல்லோரும் போய் தரிசிக்க ஏற்றமாதம்-ஆகஸ்டு மாத பௌர்ணமிதான் ஆகும். மற்றொரு அதிசயம்...'

'அது என்ன? ஜி!'-அனைவரும் வினவினர்.

'திருக்கழுக்குன்றத்திலே தினமும் என்ன வருகின்றன?'

'இரண்டு கழுகுகள் வருகின்றன.'

'அதே போல அமரநாத் குகைக்கு பௌர்ணமியன்று எங்கிருந்தோ இரண்டு புறாக்கள் பறந்து வருகின்றன. அமரநாதர் முழு உருப்பெற்றதும் இரண்டு புறாக்கள் பறந்து வந்து அக்குகையிலே காட்சித்தரும். காணக் கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். பறவைகளே வாழ இயலாத அந்தக் கடும் உறை பனியுடைய குளிர் பிரதேசத்திலே அந்தப் புறாக்கள் எங்கே எப்படி வாழ்கின்றன என்று தெரியவில்லை. இந்துக்கள் மட்டுமல்லாது புத்தர்கள், முஸ்லீம்கள் அனைவரும் வருகின்றனர். 'அமரநாத் கீ ஜெய்!' என்று கூறி வணங்கி போற்றி வழிபட்டு அருளைப் பெறுகின்றனர்.' என்று கூறி முடித்தார். ★

---

11-ம் பக்கத் தொடர்ச்சி)

கேட்ட துரியோதனனுக்கு 'முதலில் வந்தது நீயாகவிருக்கலாம் ஆயினும் நான் முதலில் பார்த்தது அர்ஜுனனையே' என்று பதிலிறுத்தான். இங்கோர் அருமையான ஐதீகம்: "குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி" (திருமாலை) என்றருளியவாறு திருவரங்கம் பெரிய கோயிலிலே பெரிய பெருமாள் சயனத் திருக்கோலத்திலே சேவை சாதித்தருள்கிறார். நம்பெருமாள் புறப்பாடு காண எழுந்தருளினால் ஆளவந்தார் முதலிய பூர்வாசாரியர்கள் பெரிய பெருமாள் திருமுடிப்பக்கமான மேல்புறத்தில் எழுந்தருளியிருக்கமாட்டார்கள். அதனைத் துரியோதன பார்ச்வம் (பக்கம்) என்பர். ஆக அவன் திருவடி வாரத்திலே ஒதுக்கியவர்களுக்கே அவனுடைய முழுமையான நோக்கு! "கழல்தல மொன்றே நில முழு தாயிற்று ஒரு கழல் போய் நிழல்தர எல்லா விசும்பும் நிறைந்தது" (திருவிரு. 58) என்றவாறு ஒரு திருவடி பூமிப் பரப்பையெல்லாம் ஆக்ரமித்துக் கொண்டது. மற்றோர் திருவடியோ பூமியில் நிழல் விழும்படியாக வானளாவப் பரந்து நின்றது. ஆக அத்திருவடி நிழலிலே ஒண்டியிருக்கும் சேதனரான நமக்கு, "நான் கட்டிய கட்டை எவனொருவன் என்னையே கால்கட்டி அவிழ்த்துக் கொள்ள விரும்புகிறானோ அவனே சம்சார துக்கத்தினின்றும் விடுபடுகிறான்' (கீதை 7-14) எனக் கண்ணனே கூறியவாறு அவன் திருவடி பற்றி உய்வதே சாலச் சிறந்தது.

# (வட) வேங்கடத்தை ஆண்ட அரசர்கள்

வேங்கடப் பகுதியை ஆண்ட அரசர்களைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் காணப்பெறும் ஒரு சில குறிப்புகளால் அறிந்து கொள்ள முடிகின்றது. எட்டுத் தொகை நூல்களாகிய அகநானூற்றிலும் புறநானூற்றிலும் புல்லி என்ற ஓர் அரசன் குறிப்பிடப் பெறுகின்றான். பத்துப்பாட்டில் ஒன்றாகிய பெரும்பாணாற்றுப் படையாலும், அகநானூற்றாலும் திரையன் என்ற ஓர் அரசனைப் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. புறநானூறு ஆதனுங்கன் என்ற ஓர் அரசனைக் குறிப்பிடுகின்றது. இந்த மூன்று அரசர்களைப் பற்றியும் சங்க நூல்களில் அறியக்கிடக்கும் செய்திகளைக் கோவைப்படுத்தி ஒரு வரலாறு காண முடிகின்றது.

புல்லி : இவன் தமிழகத்தின் வட எல்லையாக விளங்கும் வட வேங்கடத்தையும் அதனைச் சூழ்ந்த நாடுகளையும் ஆண்ட ஓர் அரசன். புல்லி ஆண்ட நல்ல நாட்டைக்கடந்தால் வடுகு மொழி வழங்கும் வடுகர் நாடு வந்துறும் என அறியக்கிடப்பதால், தமிழகத்தின் வட எல்லையைக் காத்து நின்றவன் இப்புல்லி எனக் கூறுதல் தவறாகாது.

“ புடையலம் கழற்கால் புல்லி குன்றத்து
நடையரும் கானம் விலங்கி, நோன்
சிலைத்
தொடையமை பகழித் துவன்றுநிலை
வடுகர்
பிழியார் மகிழர் கலிசிறந்து ஆர்க்கும்
மொழிபெயர் தேஎம்” *(அகம்-295)*

*[புடையல்-ஒலிக்கின்ற; நடைஅரு-செல்லற்கு அரிய; விலங்கி-கடந்து; நோன்சிலை-வலியவில்; பகழி-அம்பு; பிழி - கள்; கலி - செருக்கு; மொழி பெயர்-வேற்று மொழி வழங்கும்; தேஎம்-தேசம்]*

என்ற அகப்பாட்டடிகளால் இது தெளிவாகின்றது. இப்புல்லி என்பான் கள்வர் இனத்தாரின் தலைவனாவான். சங்க காலத்திற்குப் பிறகு தமிழகத்தின் அரசியல் அமைதியைக் குலைத்து நாட்டைப் பாழாக்கிய களப்பிரர் என்ற இனத்தாரையும் கள்வர் குலத்தவராகவே கருதுவர். சில வரலாற்று ஆய்வாளர்கள் தென்னவர் என வழங்கப் பெறும் பாண்டியர் கள்வர் தலைவராவர் என்றும், அப்பாண்டியர் படைக்குப் பயன்பெறும் யானைகள் யாவும் கள்வர் தலைவனாகிய புல்லி வாழும் வேங்கடத்தினின்றே வந்தன என்றும் அகப்பாடல்களால் அறியக்கிடக்கின்றன.

ஆகொள் மூதூர்க் கள்வர் பெருமகன்;
ஏவல் இளையர் தலைவன்; மேவார்
அருங்குறும் பெறிந்த ஆற்றலொடு
பருந்துபடப்
பல்செருக் கடந்த செல்லுறழ்
தடக்கைக்
கெடா நல்லிசைத் தென்னன்.
*(அகம்-342)*

*[ஆ - பசு; அருங்குறும்பு - அரிய அரண்; படு-வந்து கூடும்; செரு-போர்; செல்-இடி; இசை-புகழ்; தென்னன்-பாண்டியன்].*

“ வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானை
மறப்போர் பாண்டியர்.” *(அகம்-27)*

என்ற மதுரைக் கணக்காயனாரின் கூற்றுகளால் மேற்கண்ட செய்திகளை அறியலாம். இதனால் யாதோ ஒரு வகையால் புல்லி பாண்டியர் குலத்தோடு தொடர்புடையவனாதல் தெரிகின்றது. புல்லி ஆண்ட வேங்கட நாடு வேழங்கள் மலிந்த நாடு. வேங்கடத்தில் கொண்ட வெங்கோட்டு யானைகளை யுடையது பாண்டியர் படை என்று மதுரைக் கணக்காயர் கூறுவதையும் காணலாம்.

புல்லி ஆண்ட நாட்டைச் சார்ந்த வீரர்கள் தாம் வாங்கும் பொருள்களுக்கெல்லாம் யானைகளையும் யானைக் கோடுகளையுமே விலையாகக் கொடுப்பர். இந்த வீரர்கள் தம் நாட்டையடுத்த காட்டினுள் புகுந்து பெண் யானைகள் வருந்துமாறு அவற்றின் கன்றுகளைக் கைப்பற்றுவர். அவற்றை வெண்கடம்ப மரக்கிளையினின்றும் உரித்தெடுத்த நாரால் ஆன கயிற்றால் கட்டிக் கொணர்ந்து, தம் ஊரிலுள்ள கள்ளுக்கடைகளின் வாயிலிடத்தே தாம் உண்ட கள்ளின் விலையாகக்கட்டிப்போவர் •

கறையடி மடப்பிடி கானத் தலறக்
களிற்றுக்கன்றொழித்த உவகையர்
கலிசிறந்து
கருங்கால் மராஅத்துக் கொழுங்கொம்பு
பிளந்து
பெரும்பொளி வெண்ணார் அழுந்து
படப் பூட்டி
நெடுங்கொடி நுடங்கும் நியம, மூதூர்
நறவுகொடை நல்லில் புதவுமுதற்
பிணிக்கும்
கல்லா இளையர் பெருமகன் புல்லி.
*(அகம்-83)*

*[கறை-உரல்; பிடி-பெண் யானை; ஒழித்த-பிரித்துக் கொண்ட; கலி-செருக்கு; கருங்கால் மரம்-கடம்ப மரம்; கொழுகொம்பு-வளவியகிளை; பெரும் பொளி-பெரிதாக உரித்த; வெள் நார்-வெள்ளிய நார்; பூட்டி-கட்டி; நுடங்கும்-அசையும்; நியமம்-அங்காடி; நறவு-கள்; கொடை-விற்கும்; புதவுமுதல்-வாயில்].*


பேராசிரியர் டாக்டர். ந. சுப்பு ரெட்டியார்,
சென்னை.

என்ற கல்லாடனுர் பாட்டால் இதனையறியலாம்.

வீரர்களின் செயலோடு வீரர்களின் தலைவனுகிய புல்லியின் செயலையும் அறிந்து கொள்ள விழைவது இயல்பே யன்றே? மாமூலனுர் கூறுவதைக் கேட்போம்.

"உருமெனச் சிலைக்கும் ஊக்கமொடு பைங்கால்
வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ
அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்
அண்ணல் யானை வெண்கோடு கொண்டு
நறவுநொடை நெல்லின் நாண்மகிழ் அயரும்
கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வயக்கிய மாவண் புல்லி"
(அகம் 61)

[உரும்-இடி; சிலைக்கும்-ஒலிக்கும்; நோன்ஞாண்-வலிய நாண்; வன்சிலை-வலிய வில்; நிறம்-மார்பு; அண்ணல்-தலைமை வாய்ந்த; கோடு-கொம்பு; நறவு-கள்; நொடை-விற்ற; நாள் மகிழ் அயரும்-நாளோலக்கச் சிறப்புச் செய்யும்; மழபுலம்-மழவரது புலம்].

வீரர் பலருடன் புல்லி கானகம் சென்று களிறு வேட்டையாடி, அவற்றின் வெண்கோடுகளைக் கொணர்ந்து அக்கோடுகளையும் அவற்றை விற்றுப் பெற்ற நெல்லையும் நாளவைக்கண் தன்னைப் பாடிவரும் பரிசிலர்க்கு ஈந்து இன்பம் அடைவான். இங்ஙனம் இவர்களது செயலால் பிடியினை இழந்த களிறும், களிற்றினை இழந்த பிடியும் அழுது கூப்பிடும் பேரொலி அம்மலையகத்தே மாறாது ஒலிக்கும் ஒன்று புலவர்கள் அவனது நாட்டைப் புகழ்ந்து பேசுவர்.

வேழம் வீழ்த்தும் வன்கண்மை யுடையாரது செயல்களைக் கூறிய சங்கப் புலவர்கள் வலக்கை இடக்கை அறியாத ஆயர்களின் செயல்களையும் புலப்படுத்தியுள்ளனர்.

"கோடுயர் பிறங்கல் குன்றுபல நீந்தி
வேறுபுலம் படர்ந்த வினைதரல் உள்ளத்து
ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரிய
................................
குடவர் புழுக்கிய பொன்கவிழ் புன்கம்
மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும்
நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி"
அகம் 393

[கோடு-சிகரம்; பிறங்கல்-பாறை; புலம்-நாடு; படர்ந்த-அடைந்த; வம்பலர்-புதியர்; காய் பசி-மிக்க பசி; தீரிய-ஒழிய; குடவர்-இடையர்; புழுக்கிய-ஆக்கிய; புன்கம்-சோறு; பகுக்கிய-அளிக்கும்; நிரை-பசுக்கூட்டம்; குழீஇய-மிகப் பெற்ற].

என்ற மாமூலனுர் பாடலில் அந்நாட்டு ஆயர் தம் நாடு நோக்கி வருவாரை விருந்தாக ஏற்று வரகு அரிசியால் அட்ட சோற்றை ஆவின் பாலோடு கூட்டி அவர்கட்கு அளித்து வருவிருந்து பார்த்திருக்கும் பண்புடையாளர் என்று போற்றி யுரைக்கின்றார். அவரே இன்னொரு பாடலில் கூறுவதையும் கேட்போம்.

"பயந்தலைப் பெயர்ந்து மாதிரம் வெம்ப
வருவழி வம்பலர் பேணிக் கோவலர்
மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி
செவியடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்
புல்லி நன்னாடு" (அகம்-31)

[பயம் - நீர்; பெயர்த்து - அற்று; மாதிரம் - திசைகள்; வெம்ப - கொதிக்க; வம்பலர்-புதியர் (வழிப் போக்கர்); கோவலர்-இடையர்; மழவிடை-இளைய எருது; தீம்புளி-இனிய புளிச்சோறு; செவியிடை-(பசியால்) காதடைப்பு; பகுக்கும் அளிக்கும்].

பொருள் வயிற்பிரிந்து செல்லும் புதியர் கோடையின் வெம்மையால் நீர் நிலைகள் எல்லாம் வற்றிப்போன நிலையில், தம் நாட்டின் வழியாகச் செல்லுங்கால் எருதுகளின் கழுத்தில் கட்டி வைத்த புளிச்சோற்றைத் தேக்கிலையில் வைத்துத் தருவர் என்று ஆயர்களின் விருந்தோம்பும் பண்பினை எடுத்துக் கூறுவர்.

இங்ஙனம் வீரரும் ஆயரும் கலந்து வாழும் வேங்கட நன்னாடாண்ட புல்லி இரவலர்க்கு இல்லை என்னாது ஈயும் வண்மையும், அதனால் வளமார்ந்த புகழும் உடையவனாய்த் திகழ்ந்தான். அத்தகையவன் அவன் என்று அறிந்த புலவர் பெரு மக்கள் அவனைப் பெருகப் பாராட்டினர்.

"பொய்யா நல்லிசை மாவன் புல்லி"
(அகம்-359)

என்றும்,

"நெடுமொழிப் புல்லி" (அகம்-393)

என்றும் மாமூலனார் சுருங்கிய வாய்பாட்டால் பாடிப்போற்றுவதைக் கண்டு மகிழலாம்.

திரையன்: இவன் தமிழகத்துப் பேரரசர் மூவரோடும் ஒருங்கு வைத்து மதிக்கத்தக்க மாண்புடையவன் ஆயினும், இவன் குறுநிலமன்னன் என்றே வழங்கப்பெறுவான்(தொல்.பொருள் மரபு-83 (பேராசிரியர் உரைகாண்க)) பெரும்பாணாற்றுப்படையின் பாட்டுடைத்தலைவன்; தொண்டைமான் இளந்திரையன் என வழங்கப்படுவான்; கடியலூர்உருத்திரங்கண்ணனாரால பாராட்டப் பெற்றவன். 'இளந்திரையனார்' என்று சங்கப்பாடல்களால் அறியத் தக்கவரும் இவ்வரசனே. இவன் கவியரங்கேறிய காவலன். இவன் பாடியனவாக நற்றிணையில் மூன்று பாடல்களும் (94, 99, 106) புறநானூற்றில் ஒரு பாடலும் (185) காணப்பெறுகின்றன.

இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்த்
திரைதரு மரபின் உரவோன் உம்பல்
—பெரும்பாண் 29-31.

என்ற பெரும்பாணாற்றுப் படையின் அடிகளினால், இவன் முன்னோன் திரைகடல் வழியாகப் போந்து தொண்டை நாட்டுக்கு வேந்தனாயினன் என்றும், அவன் வழித்தோன்றல் இவன் என்றும் அறியலாம். வென்வேற்கிள்ளி என்ற சோழனுக்கும் நாக நாட்டு வேந்தன் மகள் பீலிவளை என்பாளுக்கும் பிறந்து, கடலில்

கலமூர்ந்து வருங்கால் அது சிதைந்து போக, இவன் திரையில் மிதந்து கரை அடைந்தான் என மணிமேகலை யால் (24-ஆம் காதை) அறிய முடிகின்றது. பின்பு அவன் அக்காரணத்தால் திரையன் எனப்பட்டான். வேந்தன் மகன் என்றற்கு அடையாளமாகத் தொண்டைக் கொடி அணிந்திருந்ததுபற்றி அவன் தொண்டைமான் ஆயினன்.

இவன் ஆண்ட தொண்டை நாட்டுக்கு வடக்கெல்லை வேங்கடமாகும்.

"வினைநவில் யானை விறற்போர்த்
தொண்டையர்
இனமழை தவழும் ஏற்றரு நெடுங்
கோட்டு
ஓங்குவெள் ளருவி வேங்கடம்"
(அகம்-213)

என்ற சான்றோர் கூற்றினால் இஃது அறியப் பெறும். இதற்குத் தென் எல்லை பெண்ணையாறும், மேல் எல்லை வடார்க்காட்டையும் சேலமா நாட்டையும் பிரிக்கும் சவ்வாது மலைத் தொடருமாகும் என்பது கல்வெட்டுகளால் அறியக் கூடிய குறிப்பாகும்.

"வென்வேல் திரையன் வேங்கட
நெடுவரை"
(அகம்-85)

"செல்லா நல்லிசைப் பொலம்பூண்
திரையன்
பல்பூங் கானல் பவத்திரி"
(அகம்-440)

என்ற குறிப்புகளால் இவன் வேங்கட நாடாண்ட விழுச்சிறப்புடையான் என்பதும், பூஞ்சோலை பல சூழ்ந்த பவத்திரி என்னும் ஊர் உடையான் என்பதும் இவனைப்பற்றி அறியத் தக்க செய்திகளாகும். 'பவத்திரி' என்னும் ஊர் கிழக்குக் கடற்கரையில் தற்காலக் கூடூருக்கு அருகில் உள்ளது.

இத்திரையன் தமிழ் மூவேந்தருள்ளும் "அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்" உடைமையாற் சிறந்தவன் என்றும், 'குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண், பகல் செய் மண்டிலம் பாரித் தாங்கு, முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டு நர்க்கும், வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி' மேம்பட்டவன் என்றும், 'புலவர் பூண்கடனாற்றிப் பகைவர், கடிமதிலெறிந்து குடுமி கொள்ளும், வென்றியல்லது வினையுடம்படினும், ஒன்றல் செல்லா' உரவோன் என்றும், அவநாட்டில் ஆறலைக்கள்வரும் பிற தீங்கு புரிவோரும் இலர் என்றும் பெரும்பாணாற்றுப் படை பெரிதாகப் பேசுகின்றது. மேலும் அப்பாடலால் அறியக் கூடிய செய்திகள் இவை: 'திருமாலை முதல்வனாகக் கொண்ட குடியிற் பிறந்தவன்; திரைதருமரபின் வழி வந்தவன். மலர்தலை உலகத்து மன்னுயிர் காக்கும் முரசு முழங்கு தானை மூவேந்தரின் சிறப்புடையவன். 'நீர்ப்பேர்' என்னும் பெயருடைய தொரு பேரூர் இவனுக்கு உரியது. காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு அரசோச்சிய பெரு மகன் இவன். யானைகள் கொணரும் விறகினால் வேள்வி வேட்கும் அந்தணர் நிறைந்த வேங்கடமலையும் இவன் ஆட்சிக்குட்பட்டது' (பெரும்பாண் 29-37; 319).

நல்லிசைப் புலவர் வரிசையில் சேர்ந்த பெருமை வாய்ந்த இவன் 'இளந்திரையம்' என்ற ஒரு நூல் இயற்றியவனென்று இறையனார் அகப்பொருளுரை, நன்னூல் மயிலைநாதர் உரை முதலியன தெரிவிக்கின்றன; நன்னூல் மயிலைநாதர் உரையில் (பக். 245) திரையனூர் என்பதற்குத் திரையனால் செய்யப்பட்ட ஊர், திரையனது ஊர் என்று பொருள் செய்திருத்தலின், இப்பெயருள்ள ஊர் ஒன்று பண்டைக் காலத்தில் இவனால் நிருமிக்கப் பெற்றதென்று அறியக் கிடக்கின்றது.

பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ
பாவீற் றிருந்த புல்விர்காள்! பாடுகோ
ஞாயிற் றொளியான் மதிநிழற்கே
தொண்டையார்
கோவீற் றிருந்த கொடை.
வஞ்சி வெளிய குருகெல்லாம்
பஞ்சவன்
நான்மாடக் கூடலிற் கல்வலிது
சோழன் உறந்தைக் கரும்பினிது
தொண்டைமான்
கச்சியுட் காக்கை கரிது.
ஆழி யிழைப்பப் பகல்போம்
இரவெல்லாம்
தோழி துணையாத் துயர்தீரும்—வாழி
நறுமாலை நாராய் திரையவோ
வென்னும்
செறுமாலை சென்றடைந்த போது,

என்பவற்றால் இவன் பரம்பரையோருடைய பெருமை புலப்படும்.

செங்கோன்மையால் சிறப்புமிக்க இவன் ஆட்சியில் அளியும் தெறலும் எளிய முறையில் நடந்தன. இவனைப் பகைத்து மலைந்த மன்னர்களின் மன்றங்கள் பாழ்பட்டன; இவனை நயந்தவர் நாடுகள் நன்பொன்பூப்ப நலமிகுந்தோங்கின. நாடோறும் வேந்தர் பலரும் பல்வேறு வகையில் பணிந்து, 'நட்புக்கொள்ள வேண்டி நயந்திசினோரும், துப்புக் கொள வேண்டித் துணையிலோரும், கல்வீழ் அருவி கடற்படர்ந்தாங்கு' இவன்பால் வந்த வண்ணம் இருந்தனர். இவர்கட்கு வேண்டுவனவற்றை அருளிய இப்பெருமகன் அரசியலின் செம்மை குறித்து அவர்கட்குச் சில அறிவுரைகளும் வழங்கினன். எ-டு, 'அரசியலை ஒரு சகடமாக உவமித்து, சகடத்தை உகைப்பவன் உகைக்குந் திறத்தை மாண்புற அறிந்தானாயின், அஃது இடையூறு சிறிதுமின்றி இனிது செல்லும்; அத்திறம் அறியானாயின் நெறியல்லா நெறியிற் சென்று சேற்றில் அழுந்தி மிக்க துன்பத்துக்குள்ளாவன்; அவ்வாறே அரசியலை நடத்தும் வேந்தன் அரசியல் முறையைத் திறம்பட அறிந்தானாதல் வேண்டும்; அதனால் நாடு நலம் பெறும்; அவனும் சீர் பெறுவன்: அறியானாயின் உட்பகை புறப்பகைகளாகிய சேற்றில் அழுந்திக் கெடுவன்' (புறம்-185) என்று அறிவுறுத்துவானாயினன்.

ஆதனுங்கன்: ஆதன் அழிசி, ஆதன் அவினி என்பாரைப் போல் ஆதன்

நுங்கனும் ஒரு குறுநில மன்னன். வேங்கடமலையும் அதனைச் சூழ உள்ள நாடும் இவனுக்கு உரியவை. இவனுக்குப்பின் வந்தவனே வேட்டுவர் தலைவனுன புல்லி என்பான். புல்லி ஆதனுங்கனுக்கு முற்பட்டவன் கருதுபவரும் உண்டு. வேங்கடத்தில் இப்போது திருமால் கோயில் கொண்டிருக்கும் பகுதியே ஆதனுங்கன், புல்லி முதலாயினோர் இருந்து நகர் அமைத்து வாழ்ந்த இடம் என்று கருதலாம். சங்கச் சான்றோர் காலத்துக்குப் பின்னும் இளங்கோ அடிகள் காலத்துக்கு முன்னுமாகிய இடைக் காலத்தில் இவ்விடத்தில் திருமால் கோயில் எழுந்தது என்று கருதவும் இடம் உண்டு. வேங்கடம் இன்றும் அழகிய சிறுசிறு அருவிகளால் பொலிவது போலப் பண்டும் சிறந்து விளங்கியது. 'கல்லிழி அருவி வேங்கடம்' (புறம்-389) என்ற ஆத்திரையனுர் கூற்ருல் இதனை அறியலாம். 'வீங்கு நீர் அருவி வேங்கடம்' (சிலம்பு-11: 41) என்று இளங்கோ அடிகளும் கூறுவர். இவன் இரவலர் இன்மை தீர்க்கும் இனிய உள்ளம் படைத்தவன். கள்ளில் ஆத்திரையனுர் என்னும் தொண்டை நாட்டு நல்லிசைப் புலவர் ஒருவர் இளையராய் இருந்த காலத்தே இவனைச் சென்று கண்டார். தன்பால் வந்த புலவரை ஆதனுங்கன் அன்புடன் வரவேற்று அருகில் இருத்தி, 'பிள்ளைப் பொருந கோடை முற்றிவற்கடம் உற்ற வறுமைமிகு காலத்தே, உறு பொருள் ஈந்து உற்ற துயர் தீர்ப்பாருள் அடியேனையும் ஒரு வனுக உள்ளுவாயாக' (புறம்-389) எனச் சொல்லி, வேண்டுவன நல்கினன் என்பது வரலாறு.

ஆதனுங்கனின் அருங்குணத்தை ஆத்திரையனுர் நன்கு உணர்ந்து அவனைத் தம் உள்ளத்தே வைத்துப் போற்றுவாராயினர். அவனை மறப்பதும் அவருக்கு அரிதாயிற்று. ஒரு சமயம் ஆத்திரையனுர் தமது ஊராகிய கள்ளிலைவிட்டு வேங்கடத்திற்குச் சென்று ஆதனுங்கனைக்கண்டு அளவளாவியிருந்தார். இருவரும்சொல்லாடுகையில், ஆத்திரையனுர் தமக்கு ஆதனுங்கன்பால் உள்ள அன்பினை எடுத்தோத வேண்டியநிலை உண்டாயிற்று. அவர்,

"எந்தை வாழி ஆத னுங்கவென்
நெஞ்சந் திறப்போர் நிற்காண் குவரே
நின்னியான் மறப்பின் மறக்குங் காலை
என்னுயிர் யாக்கையிற் பிரியும்
பொழுதும்
என்னியான் மறப்பின் மறக்குவென்"
(புறம்-175)

என்று பாடிப் போற்றினுர்.

ஆண்டுகள் பல உருண்டோடின. ஆதனுங்கனும் மீளா உலகம் புக்கான். இதனை அறிந்து வேங்கடஞ் சென்ற ஆத்திரையனுர் அவன் நாட்டை அவன் வழித்தோன்றலாகிய நல்லேர் முதியன் என்பான் ஆண்டு வருதலைக் கண்டார். அவன் முன்னேன் ஆதனுங்கன்பால் தான் இளைஞனுய் இருந்த காலத்தில் வந்தமையும், அப்பொழுது ஆதனுங்கன் தன்பால் காட்டிய அன்புடைமையையும் எடுத்துக் கூறி,

"ஆத னுங்கன் போல நீயும்
பசித்த ஒக்கல் பழங்கள் வீட
வீறுசால் நன்கலம நல்குமதி பெரும்"
(புறம்-389)

மேலே குறிப்பிட்ட மூன்று அரசர்களும் நீண்ட எல்லையாக இலங்கும் வேங்கடத்தின் வெவ்வேறு பகுதிகளை ஆண்டதாக அறியக் கிடக்கின்றது. ஒரு சில சங்கப் பாடல்களாலும் கல்வெட்டுகளாலும் மூவரில் ஒருவர் கிழக்குப் பகுதியையும், மற்றெருவர் மேற்குப் பகுதியையும், பிறிதொருவர் நடுப்பகுதியையும் ஆண்டதாகக் கருதலாம். நுங்கன் என்ற பெயரையும் பட்டத்தையும் உடைய அரசர்கள் கிருஷ்ணை நதிக்கருகிலுள்ள பகுதியைப் பதினுன்காவது பதினைந்தாவது நூற்ருண்டுகள் வரை ஆண்டதாக அறிகின்ருேம். பதினுன்காம் நூற்ருண்டைச் சார்ந்த கல்வெட்டொன்று நுங்கதேவ மகாராயர், நுங்கராயர் என்ற இரண்டு அரசர்களின் பெயர்களைக் குறிப்பிடுகின்றது. பதினைந்தாவது நூற்ருண்டைச் சார்ந்த மற்றெரு கல்வெட்டு வீர நுங்கன் என்ற பெயரையுடைய அரசன் ஒருவன் பிரகாசம் மாவட்டத்தைச் சார்ந்த ஓங்கோல் வட்டத்திலுள்ள கனு பார்த்தியினை ஆண்டதாகக் குறிப்பிடுகின்றது. (புறம்-389 ஔவை. சு. துரைசாமி பிள்ளை உரை காண்க.)

அகநானூற்றுப் பாடலால் (அகம்-340) பவத்திரி என்னும் ஊர் கூடுருக்கு அருகில் உள்ளதாக அறியக் கிடக்கின்றது என முன்னர்க் குறிப்பிட்டேன். மேலும் நெல்லூர்க் கல்வெட்டுகளால் பவத்திரி என்னும் ஊரைக் கடல் கொண்டது என்றும், அது 'கடல் கொண்ட பவத்திரி கோட்டம்' என்ற கல்வெட்டுச் சொற்றொடரால் அறியக் கிடக்கின்றது என்பதையும் அறிய முடிகின்றது. இந்தக் கடல் கோளுக்குப் பிறகு திரையன் தன் தலைநகரைக் காஞ்சிக்கு மாற்றிக் கொண்டான் என்பது தெளிவாகின்றது. காஞ்சி மாநகர் இளந்திரையனின் தலைநகராக இருந்தது என்பதனையும், அது வட நாட்டிலுள்ள நலாந்தா, தட்சசீலம் போன்று பல்கலைக் கழகங்களைக் கொண்டிருந்தது என்பதனையும் நாம் அறிவோம்.

புல்லி என்பான் வேங்கடத்தின் மேற்குப் பகுதியை ஆண்டிருத்தல் கூடும். இப்பகுதி பாண்டியர் அரசாண்ட பகுதிக்கு மேற்பகுதியாக அமைந்திருந்தது என்பது அடியற் கண்ட சங்கப் பாடல்களின் பகுதிகளால் அறியக்கிடக்கின்றது.

"செந்நுதல் யானை வேங்கடம்"
(அகம்-265)

"ஓங்கல் யானை உயங்கிமதம் தேம்பிப்
பன்மா ஒருசிறைப் பிடியொடு வதியும்
புடையலங் கழற்கால் புல்லிக்
குன்றத்து"
(அகம்-292)

"ஞால்வாய்க் களிறு பாந்தட் பட்டெனத்
துஞ்சாத் துயரத் தஞ்சுபிடிப் பூசல்
நெடுவரை விடரகத் தியம்பும்
கடுமான் புல்லி காடிறந் தோரே"
(நற். 15)

மேற்குத் தொடர்ச்சி மலை இயல்பாக யானைகள் வாழும் இடமாகும். அவை பெரும்பாலும் அண்மையிலுள்ள மலைப் பகுதிகளில் அலைந்து திரிந்திருத்தல்கூடுமேயன்றிக்கிழக்குக் கடற்கரைப் பகுதியையோ அன்றி கிழக்குப் பகுதியையோ எட்டியிருத்தல் முடியாது.

# கணபதி வழிபாடு



ஏக தந்தம் ஸூர்பகர்ணம் கஜவக்த்ரம்
சதுர்புஜம்
பாசாங்குசதரம் தேவம் த்யாயேத்
சித்தி விநாயகம்
உத்தமம் கணநாதஸ்ய வ்ரதம்
ஸம்பத்கரம் சுபம்
பக்தானும் இஷ்ட தாதாரம் சர்வ
மங்கள தாரகம்
த்யாயேத் கஜானனம் தேவம் தப்த
காஞ்சன சன்னிபம்
சதுர்புஜம் மகா காயம் ஸர்வாபரண
பூஷிதம்

தெருமுனை, குளக்கரை, ஆற்றங்கரை, கோயில், கொட்டகை என்று எங்கும், கொடுத்த இடத்தில் கொற்றம் நடத்தும் மூர்த்தி இவர், பூவெடுத்தால் புன்னகைக்கும் கடவுள் கூட்டத்தில் புல்லெடுத்தால் போதும் பெரு மகிழ்ச்சி கொள்வார்.

குற்றம் பார்க்காமல் குணத்தைப் பார்த்துக் குடும்பத்தில் ஒருவராய் எழுந்தருளியவர். பாலும் தெளி தேனும் பாகும் பருப்பும் கலந்தளித்த ஔவையார் இவருக்கு அவலும் தந்தார், அகவலும் தந்தார்.

இவர் உருவம் செய்ய வேண்டுமே என்ற கவலை வேண்டியதில்லை. பிடித்து வைத்தால் அது பிள்ளையாராகிவிடும். மஞ்சள், வெல்லம், எது கிடைத்தாலும் பிடித்து வைத்து பிள்ளையார் பூஜை செய்து விடலாம். பிள்ளையார் சதுர்த்தியன்று களிமண்ணால் பிள்ளையார் செய்து பூஜிப்பதே விசேஷம். பிறந்த மண்ணை ஒவ்வொருவரும் தெய்வமாகக் கொண்டாட வேண்டும் என்ற தேச பக்தி தத்துவமும் இவர் வழிபாட்டில் அடங்கியுள்ளது. மூலாதாரம் பிருத்வி அம்சம். பிருத்வி என்றால் மண். ஆகவே களி மண்ணில் உருவம் செய்வது விசேஷம்.

விநாயகர் உருவை வெள்ளை எருக்க மரத்தில் செய்வது மிக விசேஷம். இதன் செடி சாதாரண எருக்கன் செடி போலவே இருக்கும். இதன் முற்றிய வேரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். வேர் காயக்காயத்தான் அதில் வேலை செய்ய முடியும். வெள்ளெருக்கில் விநாயகர் மட்டுமே செய்யப்படுகிறது.

விநாயகரை வழிபடுவதே எளிது. ஆனால் அவரால் பெறக்கூடும் வரமோ பெரிது. விக்னங்கள், இவரை வழிபட்டால் விலகிவிடும். "வெள்ளைக் கொம்பன் ஐங்கரனைத்தொழத்தொழ துள்ளி ஓடும் தீயவினைகளே".

மகா கணபதி உபாஸனைக்கு 21 பத்திரங்கள்: முல்லை இலை, கரிசிலாங்கன்னி இலை, வில்வம், வெள்ளறுகம் புல் (வேரோடு கூடியது) இலந்தை இலை, ஊமத்தை இலை, வன்னி இலை, நாயுருவி இலை, கண்டங்கத்திரி இலை, அரளி இலை, எருக்கிலை, மருதை இலை, விஷ்ணுக்கிரந்தி இலை, மாதுள இலை, தேவதாரு இலை, மருவு, அரச இலை, சாதிமல்லிகை இலை, தாழை இலை, அகத்திக்கீரை இலை, தவனம்.

விநாயக அனுக்கிரகத்தால் 21 விதமானபலன்கள்: தர்மம், பொருள், இன்பம், சௌபாக்கியம், கல்வி, பெருந்தன்மை, நல்வாழ்வுடன் கூடிய மோக்ஷம், முகத்தில் பால் வடியும் தன்மை, வீரலக்ஷ்மி கடாக்ஷம், விஜய லக்ஷ்மி கடாக்ஷம், எல்லோரும் தன்னிடம் அன்பாக இருக்கும் தன்மை, குடும்பத்தில் கர்ப்ப ரக்ஷை, மக்கட்பேறு, நுண்ணறிவு, நற்புகழ், சோகத்தினால் வாடாத தன்மை, அசுபங்களை அகற்றல், தன் வாக்குக்கு எதிர் வாக்கு அடங்கிப்போதல், கோபம் கொண்டவர்களைச் சாந்தப்படுத்தும் தன்மை, பிறர் ஏவும் ஆபிசாரம் அடக்குதல், துயர் தீர்த்தல்.

### அருகம்புல் ஏன்?

விநாயகர் பூஜைக்கு அருகம்புல் (தூர்வை) மிகவும் ஏற்றது. விநாயகர் ஞானத்தீ. அருகம்புல்லும் மிக உஷ்ணமானது. அகலன் என்ற அசுரனை விழுங்கியபோது அவன் வயிற்றுள் சென்று தஹித்தான் என்றும், அதைச் சமனப்படுத்தவே அருகம்

புல்லைத் (உஷ்ணம்உஷ்ணேன சாந்தி) தரிக்கிறார்.

தலையில் குட்டிக் கொள்வதும், தோப்புக்கரணம் போடுவதும் அவருக்கு மிகப் பிரியமானது.

"தோர்பி; கர்ணம்" என்பதே தோப்புக்கரணம் என்று மாறியது. "தோர்பி:" என்றால் "கைகளினால்" என்று அர்த்தம். 'கர்ணம்' என்றால் காது. "தோர்பி: கரணம்" என்றால் கைகளால் காதைப் பிடித்துக் கொள்வது.

குட்டிக்கொள்வதன் தாத்பர்யமாவது: நெற்றிப் பொட்டில் குட்டிக் கொள்வதால் அங்கேயுள்ள அமிர்த கலசத்தை எழுப்பி அந்த அமிர்தம் தேகம் பூராவும் பரவுகிறது. தோப்புக்கரணம் மூலாதாராத்திலுள்ள சுஷும்னா நாடியைத் தட்டி எழுப்புகிறது. இதனால் உடம்புக்குத் தெம்பும் மனத்திற்குத் தெளிவும் ஏற்படுகின்றன.

விநாயகர் வழிபாட்டிற்குக் கடினமான விதிமுறைகளோ ஆசார நியமங்களோ கிடையாது. அன்பும் நம்பிக்கையும்தான் தேவை.

"போதும் பெருவிடில் பச்சிலை உண்டு
புனல் உண்டு—எங்கும்
ஏதும் பெருவிடில் நெஞ்சு உண்டு
அன்றே".

என்றபடி அன்பினால் மனம் உருகி எவரும் எவ்விடத்தும் எவ்வகையிலும் விநாயகரை எளிதாக வழிபட்டு உய்யலாம்.

**விநாயக விரதங்கள்:**

விநாயகப் பெருமானுக்குரிய விரதங்கள் மூன்று. ஒவ்வொரு வாரத்திலும் வரும் வெள்ளிக்கிழமையும், விநாயகசதுர்த்தியும், ஒவ்வொரு மாதத்தில் வரும் வளர்பிறை சதுர்த்தியும் ஆகும்.

சிறப்பாக ஆவணி மாதம் வளர்பிறை சதுர்த்தியே மிக முக்கியமானதாகும். விநாயகர் பிறந்தது அன்று தான்.

வரும் விக்னங்களை வெல்ல பகவான் புத்தியைக் கொடுத்திருக்கிறார். புத்தி சாமர்த்தியம் நம்முடைய சொந்தம் என்று நினைப்பது அகம்பாவமாகும். அப்புத்தியைக் கொடுத்த அவரை பூஜித்து அருள் பெற வேண்டும். அருளுடன் கூடிய புத்திக்கு எதிர் கிடையாது.

விநாயக சதுர்த்தியன்று விநாயகரை வழிபட்டுப் பின்கண்ட சுலோகத்தைச் சொல்ல வேண்டும்.

ஸிம்ஹ: ப்ரஸேந மவதீத் ஸிம்ஹோ
ஜாம்பவதா ஹத: |
ஸுகுமாரக மா ரோதீ: தவ ஹ்யேஷ:
ஸ்யமந்தக: ||

விரத சூடாமணி கல்பத்தில் இதைக் கூற வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**சதுர்த்தி விரதம்:**

பிரதி மாதமும் கிருஷ்ண பட்ச சதுர்த்தி பிள்ளையார் வழிபாட்டுக்கு விசேஷம். இதுவே சங்கடஹர சதுர்த்தி. மாசி மாதம் கிருஷ்ண பட்சம் செவ்வாய்க் கிழமையன்று சதுர்த்தி வருமானால் அன்றைய தினம் கணபதிக்கு உகந்த ஸங்கடஹர சதுர்த்தி விரதத்தைத் தொடங்குவார்கள். ஒவ்வொரு மாத சதுர்த்தியிலும் இருந்து ஏகதந்த சதுர்த்தி விரதம் ஸ்தோத்திரம், அங்காரக சதுர்த்தி ஸ்தோத்திரம் இவற்றைச் சொல்லி கணபதியை வழிபடுவதால் எந்த சோதனைகளையும் மீறி முன்னேற இயலும்.

கணேசருடைய பூஜையினால் அடையக்கூடிய புண்யலோகத்திற்கு "ஆனந்த லோகம்" என்று பெயர். கணேச புஜங்கம் என்ற ஆதிசங்கரர் ஸ்தோத்திரத்தில் ஆனந்தம் என்ற சொல் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

சுக்ல சதுர்த்தி திதியின் அதிபதியான தேவி தன்னை அவருடைய இருப்பிடமாக செய்து கொள்ளும்படி வேண்டினாள். கணபதி அவளை அநுக்ரஹித்துக் கூறியதாவது:

"நான் உனக்கு மத்யானத்தில் தரிசனம் கொடுத்தபடியால் சுக்ல பக்ஷ சதுர்த்தியும் மத்யான்னமும் கூடிய சுபதினத்தில் என்னை பூஜிப்பவர்கள் என் அருளைப் பெறுகிறார்கள். சதுர்த்தியில் ஆகாரமில்லாமல் என்னைப் பூஜிப்பவர்களுக்கு நான்குவித புருஷார்த்தங்களையும் கொடுப்பேன்" இதனால் சதுர்த்தி தேவிக்கு வரதை என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

கிருஷ்ண சதுர்த்தியின் அதிபதியான சக்தி வழிப்பட்டபோது அவர் கூறியதாவது;

"சந்திரோதயத்தில் நீ என்னை வழிபட்டதால் கிருஷ்ண சதுர்த்தியும் சந்ரோதயமும் கூடிய காலம் முக்கிய விரதமாகும். அப்போது என்னை பூஜிப்பவர்களுக்கு என் அருள் நிச்சயம் கிடைக்கும். சங்கட சதுர்த்தி விரதம் அனுஷ்டானம் செய்கிறவர்களுக்கு சங்கடமெல்லாம் தீர்ந்து விடும். உனக்கு ஸங்கஷ்டஹரணி என்ற பெயர் உண்டாகட்டும்".

அங்காரன் விநாயகரை ஒரு செவ்வாய்க் கிழமை சதுர்த்தியில் மாசி மாதம் கிருஷ்ண சதுர்த்தியில் பூஜை செய்து பேறு பெற்றான். செவ்வாயும் சதுர்த்தியும் சேருகிற தினம் மிக முக்கியம். அங்காரகன் என்னும் செவ்வாய் கடன், வியாதி இவற்றுக்கு அதிபதி. இந்த சதுர்த்தி விரதம் இருப்பதால் அங்காரகப் பிரீதியுடன் கணேசரின் அருளையும் பெற இயலும்.

அங்காரகன் கணபதியைக் குறித்து நீண்ட நாள் தவம் இருந்தான். மாசி மாத கிருஷ்ண பக்ஷ சதுர்த்தியன்று சந்திரோதய காலத்தில் விநாயகர் அவன் முன் தோன்றினார். செவ்வாய், "இன்று தங்களைக் குறித்து விரதம் அனுஷ்டிப்பவருடைய சங்கடங்கள் அனைத்தையும் நீக்கி தாங்கள் அருள்புரியவேண்டும்" என்று வரம் கேட்டான். அவரும் அவனை நவக்கிரங்களில் ஒருவராக இருக்க ஆசிர்வதித்தார்.

சங்கடஹான சதுர்த்தியன்று காலை முதல் சந்திரோதயம் வரை நீர் தவிர எதுவும் உட்கொள்ளாமல் சந்திரனைப் பார்த்தபின், அர்க்கியம் கொடுத்த பின் 21 அருகம்புல் கொண்டு கணேசரின் 21 நாமங்களை அர்ச்சித்து அதன்பின் உப்பு, காரம் சேர்க்காத உணவை உட்கொள்ள வேண்டும். இப்பூஜை வெள்ளி அல்லது தங்க பிள்ளையாரை வைத்துச் செய்வது விசேஷம்.

கணபதி ஹோமத்தை வெள்ளிக்கிழமைகளிலும், சுக்லபக்ஷ சதுர்த்தி திதிகளிலும் உதயத்தில் நடத்த வேண்டும். ஆடி மாதம் செய்வது இன்னும் விசேஷம்.

மலையாளத்தில் நம்பூதிரிகள் காலம், நாளம், மூலம் இம்மூன்றும் கணபதி ஹோமத்திற்கு முக்கியமானவை என்று கூறுவார்கள். அதாவது உதயகாலம், மெல்லியதாகவும் நீளமாகவும் கீறிய தேங்காய் கீறுகள், மூலமந்திரம் இம்மூன்றுமேயாம்.

**கணபதி மந்திரம் :**

மகா கணபதி மந்திரம் ஆறு அட்சரங்களுடன் கூடியது 'ஓம் கணபதயே', 'வக்ர துண்டாயஹூம்' என்பவை. இருபத்து எட்டு அட்சரங்களுடன் கூடியது ஓம், ஸ்ரீம், ஹ்ரீம், க்லீம், க்லௌம் கம் கணபதயே வர வரத, ஸர்வஜனம்மே வசமானய ஸ்வாஹா என்பது. மகா கணபதி மந்திரத்தை ஜபம் செய்து, அதற்கான ஹோமம்செய்யும்போது, 'ஸ்வாஹா' என்ற பதம் இருமுறை உச்சரிக்க வேண்டும்.பிரதி வெள்ளிக்கிழமையும் சூரியோதய காலத்தில் மகா கணபதி ஹோமம் செய்தல் விசேஷ பலனைக் கொடுக்கும். இந்த ஹோமத்திற்குத் தேங்காய், எள்ளு, நெல் பொரி, அவல், கரும்பு, மோதகம், நெய், பாயசான்னம், சத்துமா முதலியவை ஹோமத் திரவ்யங்களாகும்.

மகா கணபதியை சாதாரணமாக தனி பிரும்மச்சாரி ரூபத்தில் உபாசிப்பது வழக்கம். வல்லபை என்ற சக்தி ரூபத்துடன் வல்லப கணபதி ரூபமாயும் உபாசிப்பதுமுண்டு. ஸ்மிருதிகளில் பஞ்சமூர்த்தி பூஜையைக் குறிப்பிடும்போது கணபத்யாதி (கணபதி முதலிய) என்று இவருக்கு விசேஷ ஸ்தானம் அளிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ஆதிசங்கரர் ஸ்தாபித்த ஆறு மதங்களில் "காணபத்யம்" என்பது முதல் மதம்.

## சந்தாதாரர்களுக்கு. . .

31-10-88—ஆம்தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

18 52 54 58 60 103 109 111 112 189 190 237 239 244 245 246 365 381 403 404 405 406 407 409 முதல் 416 421 428 583 584 825 826 829 831 832 832 833 2000 2002 2003 2004 2020 2021 2022 2025 2031 2035 2038 2043 2049 2054 2055 2056 2061 2062 முதல் 2068 2076 3416 முதல் 3429 3431 முதல் 3444 3417 முதல் 3467 3470 முதல் 3492 3494 முதல் 3501 3503 முதல் 3508 3510 முதல் 3531 3533 முதல் 3544 3547 முதல் 3553 3555 முதல் 3570 3572 முதல் 3577 3579 முதல் 3580.

**பூஜைக்குரிய பூர்த்தி :**

பூஜை செய்வதற்குரிய மூர்த்தங்கள் வெள்ளியிலோ, பஞ்ச லோகத்திலோ, ஸ்படிகத்திலோ, ஸ்தபதிகளை கொண்டு செய்து வைத்துக் கொள்ளலாம். ஆனால் ஸ்வயம்புவானது, நேபாள தேசத்தில் கிடைக்கும் சிவப்பு வர்ணம் கொண்ட "சோண பத்ரம்" எனப்படும் சாலக்கிராம ரூபமாகும். மண்ணினால் மகா கணபதி ரூபம் செய்து, விநாயக சதுர்த்தி தினத்தில் வீட்டில் பூஜை செய்ய வேண்டியது. இந்த மூர்த்திக்கு அளவு உண்டு. பூஜை செய்யும் யஜமானின் கட்டை விரல் அளவுக்கு பன்னிரண்டு பங்குக்கு மேல் உயரம் இருக்கக் கூடாது.

விடியற்காலை எழுந்ததும் ஸ்ரீ கணபதியைத் தியானித்தால், சகல ஸ்ரேயஸும் உண்டாகும். ஸ்ரீ ஆதிசங்கரர் இயற்றியுள்ள 'முதாகரர்த்த மோதகம்' என்று துவங்கும் ஐந்து சுலோகங்களையும் கொண்ட கணேச பஞ்சரத்னத்தை அர்த்தம் தெரிந்து கொண்டு ஸ்தோத்திரம் செய்யலாம். பின்பு ஸ்நானாதிகளை முடித்துக் கொண்டு குருமுகமாக உபதேசம் பெற்ற கணபதி ஷடாக்ஷரம் (6) அல்லது கணபதி அஷ்ட த்விம்சதி (28) அட்சரம் உள்ள மந்திரத்தை ஜபம் செய்யலாம். விசேஷ சமயங்களில் மேலே சொன்னபடி குருமுகமாய் ஹோமம் செய்யலாம். அவ்வளவு செய்ய முடியாவிடில், கீழ்க்கண்ட எல்லோருக்கும் தெரிந்துள்ள சுலோகத்தை குழந்தை முதல் பெரியோர்கள் வரை தியானத்துடன் சொல்லலாம். இதற்கு வேறு உபதேசம் தேவை இல்லை.

**கஜானனம் பூதகணாதி ஸேவிதம்**
**கபித்த ஜம்பூ பலஸார பக்ஷிதம்**
**உமாசுதம் சோகவிநாச காரணம்**
**நமாமி விக்னேச்வர பாத பங்கஜம்**

(யானை முகத்துடையவரும், பூத கணங்களால் வணங்கப் பட்டவரும், விளாம்பழம், நாகப்பழம் இவைகளின் ஸாரத்தை ரசிப்பவரும்; உமையின்

புத்திரனும், துக்கத்தைத் தீர்ப்பவருமான விகநேசுவரரின் பாத கமலங்களில் நமஸ்காரம் செய்கிறேன்.)

பிள்ளையார் சதுர்த்தி பூஜை நடைபெறும் மாதம்தானே ஆண்டின் முதல் மாதமாக இருக்க வேண்டும்? அப்படித்தான் ஒரு காலத்தில் இருந்திருக்கிறது.

இந்நாளில் சித்திரையை முதல் மாதமாகக் கொண்டு ஒரு ஆண்டு கணிக்கப் பெற்று வருகின்றது. இங்ஙனமின்றி மிகப் பழங்காலத்தில் ஆவணியை முதல் மாதமாகக் கொண்டு மாதங்களைக் கணித்தல் அறிஞர்களின் வழக்கமாக இருந்து வந்தது. ஞாயிற்றுக்குரிய ஓரை சிங்க வோரை என்றும், அதற்குரிய திங்கள் ஆவணியாதலின், ஆவணி தொடங்கி மாதங்களை எண்ணுதல் ஒரு முறை என்றும் பண்டையோர்கள் கொண்டிருந்தனர். இவ்வுண்மை.

"கால உரிமை எய்திய ஞாயிற்றுக்கு உரிய சிங்கவோரை (ஆவணி) முதலாகத் தண்மதிக்கு உரிய கற்கடக வோரை (ஆடி) ஈறாக வந்து முடியுந்துணைவும் ஓர் யாண்டுஆம். ஆதலின், அதனை இம்முறையானே அறுவகைப் படுத்து இரண்டு திங்கள் ஒரு காலம் ஆக்கினார்" என ஆசிரியர் நாச்சினார்க்கினியர், "காரும் மாலையும் முல்லை" எனவரும் தொல்காப்பிய நூற்பாவின் உரையில் கூறியுள்ளது கொண்டும் தெளியப்படும். இவ்வாறு ஆவணியை முதல் மாதமாகக் கொண்டு கணிக்கும் முறை சுமார் 7000 ஆண்டுகட்கு முன்பு தொடங்கியிருத்தல் வேண்டும் என வானநூல் ஆராய்ச்சி நிபுணர்கள் கருதுகின்றனர்.

ஆவணி மாதம், ஆண்டின் முதல் மாதமாகக் கருதிக் கணிக்கப் பெற்று வந்த அப்பழங்கால முதலே, விநாயகர் வழிபாடும் தோன்றி நிலவிவரத் தலைப்பட்டிருத்தல் வேண்டும்! இத்தகைய செய்திகளால், விநாயகர் வழிபாட்டின் பழமையும் பெருமையும் விளங்குதல் காணலாம்.

**நான்காம் பிறைச் சந்திரனைப் பார்க்காதே:**

சந்திர மண்டலத்துக்கு அதிஷ்டான தேவதையான சந்திரன் ஒருபொழுது தன் அழகின் செருக்கினால் விநாயகரைப் பழித்தான். அந்தப் பழிப்பினால் சந்திரனை ஒருவருமே பார்க்ககூடாது என்ற சாபம் ஏற்பட்டது. அந்தச் சாபத்திற்கான விமோசனம் சந்திரன் வேண்ட மாலையில் ஆகாசத்தில் பார்த்தவுடனே கண்ணுக்கெதிரில் நிற்கும் நாலாம் பிறைச் சந்திரனை மாத்திரம் பார்க்கக் கூடாது என்று அந்தச் சாபம் குறைக்கப்பட்டது.

துவாரகையிலிருந்து தென்மேற்கு முகமாக யதுவம்சத்தில் பிறந்த ப்ரஸேனன் என்பவன், தற்கால ரேடியத்தைப் போன்று ஸ்வயம்பிரகாசத் தன்மையில் அதைவிட மேலானதாயும், ஸூர்ய மண்டலத்திலிருந்து கிடைத்ததுமான ஸ்யமந்தகமென்னும் ரத்தினத்தைத் தரித்துக் கொண்டு, காட்டின் வழியே குதிரை யேறிச் செல்ல, அவனை ஒரு சிங்கம் கொன்றது. அந்தச் சிங்கத்தைக் காட்டில் தெய்வீகக் கரடியுருவும் கொண்ட ஜாம்பவான் கொன்று, அந்த மணியை வெகுதூரம் பாதாளத்திலுள்ள தன் குகையில் குழந்தையிடப்பட்ட தொட்டிலில் கட்டினார்.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஒரு சமயம் சுக்லபக்ஷ சதுர்த்தியன்று சந்திரனை பார்த்தார். நாலாம் பிறைச் சந்திரனைப் பார்த்தவனுக்கு வீண்பழி வரும். ஈச்வராவதாரமாக இருந்தாலும் மனித பிறவி எடுத்த பிறகு, பிரபஞ்சச் சட்டங்களுக்குத் தாமும் உட்பட்டே தீரவேண்டும் என்று என்னும் தத்துவத்தை அவர் விளக்கினார். பிரஸேனனைக் கொன்று ஸ்யமந்தக மணியை ஸ்ரீ கிருஷ்ண பகவானே அபஹரித்தார் என்னும் வீண் அபவாதத்துக்கு அவர் உட்பட்டார். உலகத்தோருக்கு உண்மையைத் தெரியப்படுத்தித் தம் அபவாதத்தை நீக்கிக்கொள்ள அவர் புறப்பட்டார்; காட்டுக்குச் சென்றார்; பிரஸேனன் பிரிந்துபோன வழியை அவனது குதிரையின் காலடிச் சுவட்டைக் கொண்டு தொடர்ந்து சென்றார். ஜாம்பவானின் குகைக்குள் துவாரத்தில் குதிரையையும் ப்ரேஸனனையும் இறந்த சிங்கத்தின் உயிரற்ற சரீரத்தையும் பார்த்தார். குகைக்குள் வெகுதூரம் சென்றார். ஜாம்பவானின் புத்திரியான கும்பவதி தன் தம்பியைத் தொட்டிலிட்டுக் குழந்தை அழாதிருக்குமாறு தாலாட்டிக் கொண்டிருந்தாள். தொட்டிலின் விதானத்தில் ஸ்யமந்தக மணி கட்டியிருப்பதைக் கிருஷ்ணன் கண்டார். அந்தத் தாலாட்டுப் பாட்டு இது—

ஸிம்ஹ: ப்ரஸேநமவதீத், ஸிம்ஹோ
ஜாம்பவதா ஹத: |
ஸுகுமாரக மா ரோதீ:, தவ ஹ்யேஷ
ஸ்யமந்தக: ||

ஜாம்பவான் ஸ்ரீ கிருஷ்ணனோடு யுத்தம் செய்தார்; பகவானின் பலத்தைக் கண்டு நம் தெய்வமான ஸ்ரீ ராமனே இவன் என்று கண்டுகொண்டார்; ஜாம்பவதியையும் ஸ்யமந்தக மணியையும் பகவானுக்கு ஸமர்ப்பித்தார். ஜாம்பவதி கல்யாணமும் நடந்தது.

இந்தத் தாலாட்டுப் பாட்டை விநாயக சதுர்த்தியன்று சொல்லுகிறவர்களுக்கு வருஷம் முழுவதும் எந்தச் சுக்லபக்ஷ சதுர்த்தியில் சந்திரனைக் கண்டிருந்தாலும் அந்தத் தோஷம் பரிஹாரமாகிறது.

**மோதகம் பிறந்த வரலாறு :**

விநாயகருக்கு மிகவும் பிடித்தமானது மோதகம் என்ற கொழுக்கட்டை. பிரும்மம் எப்படி சர்வ வியாபியாக விளங்குகிறதோ அப்படி விநாயகர் எங்கும் சர்வ வியாபியாக விளங்குகிறார். இப்பேர்ப்பட்டவர் தன் கிருகத்திற்கு வரப் போகிறார்என்பதையும் அப்படி வரும் நாளையும் குறிப்பின் மூலம் அறிந்து கொண்டாள் அருந்ததி.

பிரும்மம் இந்த அண்டத்தில் எங்கும் நிறைந்திருக்கிறது என்கிற ரகஸ்யத்தை அறிந்த அருந்ததி இந்த உண்மையை உலகத்திற்கு எடுத்துக் காட்ட அண்டம் என்ற அர்த்தத்திலே வெள்ளை மாவினால் செப்பு செய்து பிரும்மம் எங்கும் பூர்ணமாக நிறைந்திருக்கிறது என்ற அர்த்தத்தில் உள்ளே அமிர்தமயமான பூர்ணத்தை வைத்து வசிஷ்டரிடம் கொடுத்து அதை கிருகத்திற்கு வரும் விநாயகருக்கு நைவேத்தியம் செய்யும்படிக் கூறினாள்.

தம் தத்துவத்தை உணர்ந்து அதை எடுத்துக் காட்டும் வகையில் தயாரிக்கப்பட்ட அண்டத்தை விநாயகர் பெரு மகிழ்ச்சியோடு ஏற்று அத்தம்பதிகளுக்கு நல்ல சிரேயஸ்ஸையும், ஜீவன் முக்தியையும் அளித்தார்.

—நஜன்.

